மலர் 15 இதழ் 77

NAVAMANI (Tamil Daily) MADRAS1

4 பக்கம் 25 காசு

Regd. M No. 7897

Phone No. 76190: 76191

"நவமணி"
சந்தா விகிதம்
1—9—74 முதல்
தனிப் பிரதி 25 காசு

| | உள்ளூர் ஏஜண்டு மூலம் | தபால் மூலம் |
|---|---|---|
| 1 மாதம் | ரூ. 7-50 | ரூ. 8-00 |
| 3 மாதம் | ரூ. 22-50 | ரூ. 24-00 |
| 6 மாதம் | ரூ. 45-00 | ரூ. 48-00 |
| 1 வருடம் | ரூ. 90-00 | ரூ. 96-00 |

# நவமணி

கூட்டுறவு முறையில் தொழிலாளர்கள் நடத்தும் ஒரே தமிழ்த் தினசரி

சென்னை 28-11—74 வியாழன் வெளியூர் 29-11—74 வெள்ளி

2 அழகிகளுடன் வாலிபர் பட்டபாடு

2-ம் பக்கம்

# தேவராஜ் அர்ஸ் பேச்சுக்கு கருணாநிதி மறுப்பு

## "கபினி ஆற்றில் அணை கட்டுவதை பலமுறை எதிர்த்திருக்கிறோம்"

சென்னை, நவ. 28—கபினியில் கர்நாடக அரசு அணை கட்டுவதைக் தமிழக அரசு எதிர்க்கவில்லை என்று மைசூர் முதல்வர் தேவராஜ் அர்ஸ் கூறியது தமக்கு வியப்பளிப்பதாக முதலமைச்சர் கருணாநிதி கூறினார்.

1955-ம் ஆண்டிலிருந்து பல முறை தமிழக அரசு கபினியில் அணை கட்டுவதை எதிர்த்திருப்பதுடன் அணை கட்டக் கூடாது என்று மத்திய அரசும் மைசூரிடம் கூறியிருக்கிறது என்று கருணாநிதி தெரிவித்திருக்கிறார்.

காவிரி நீர்ப்பிரச்சினை சம்பந்தமாக டெல்லியில் மத்திய பாசன அமைச்சர் ஜெகஜீவன் ராம் தலைமையில் முதலமைச்சர்கள் மாநாடு இன்று நடைபெறுகிறது.

தமிழக முதலமைச்சர் கருணாநிதி, கர்நாடக முதலமைச்சர் தேவராஜ் அர்ஸ், கேரள முதலமைச்சர் அச்சுத மேனன் ஆகியோர் இந்த மாநாட்டில் கலந்து கொள்கின்றனர்.

கருணாநிதியுடன் தொழிலமைச்சர் மாதவன், பொதுப்பணி அமைச்சர் ப. உ. சண்முகம் ஆகியோரும் கலந்து கொள்கின்றனர்.

டெல்லியில் நடைபெறும் மாநாட்டில் கலந்து கொள்ளச் செல்லும் கர்நாடக முதலமைச்சர் தேவராஜ் அர்ஸ் கபினியில் அணை கட்டப்படுவதை தமிழக அரசு இதுவரை எதிர்க்கவில்லை என்று கூறியிருந்தார்.

இன்று காலையில் இந்தச் செய்தியை பத்திரிகைகளில் பார்த்த கருணாநிதி, டெல்லிக்குப் புறப்படும் முன் அறிக்கை ஒன்று வெளியிட்டார்.

அதில் கூறப்பட்டிருப்பதாவது:—

காவிரியில் கபினி அணைக் கட்டப்படுவதை தமிழ்நாடு அரசு ஆட்சேபிக்கவில்லை என்ற செய்தி இன்று சில பத்திரிகைகளில் மைசூர் முதலமைச்சர் தேவராஜ் அர்ஸ் கூறியதாக வந்துள்ளது. நாம் (தமிழக அரசு) 1955-ம் ஆண்டிலிருந்து கபினி அணை கட்டப்படுவதில் நமக்குள்ள ஆட்சேபணையை துவக்கத்திலிருந்து தெரிவித்து வந்திருக்கிறோம்.

1967-ம் ஆண்டு இந்த ஆட்சேபணையை மத்திய அரசுக்கு எழுதியுள்ளோம். 67 க்கு முன்பு 5 முறை நடந்த முதலமைச்சர் மாநாடுகளில் கபினி அணை கட்டப்படுவதை நாம் தொடர்ந்து ஆட்சேபித்திருக்கிறோம். மத்திய அரசும், கர்நாடக அரசு கபினி அணை கட்டுவதை நிறுத்தி வைக்கும்படி கேட்டுக் கொண்டது.

### சுப்ரீம்கோர்ட் 'ஸ்டே'

1971-ம் ஆண்டும் நாம சுப்ரீம கோர்ட்டில் வழக்கு போடும போது, நாம 'ஸ்டே' கேட்டது கபினியில் அணை கட்டுவதை நிறுத்தி வைக்கக் கோரித்தான். கபினியில் அணை கட்டுவதற்கு மத்திய அரசு அனுமதிக்கவில்லை என்று மத்திய நீர்ப்பாசன அமைச்சர் கே. சி. பந்த் 10—4—74-ல் நமக்கு எழுதியுள்ளார்.

### வியப்பு

ஆகவே, கபினி அணை கட்டுவதை நாம் ஆட்சேபிக்கவில்லை என்பது மிகவும் வியப்பாக உள்ளது.

விதிகள், நடைமுறைகள் உருவாக்கப்பட்ட பிறகுதான் கபினி நீரை யார் எவ்வளவு பயன்படுத்துவது என்பது பற்றி முடிவு செய்யலாம். அதுவரைக்கும் கபினியில் தண்ணீரைக் கர்நாடக அரசு முடக்கிவைத்தது முறையல்ல அப்படியிருக்கையில் தமிழ்நாடு எவ்வளவு தண்ணீர் தேவை என்று கர்நாடக அரசைக் கேட்கவில்லை என்கிற வாதம சரியானதல்ல.

மேற்கண்டவாறு கருணாநிதி தனது அறிக்கையில் கூறியுள்ளார்.

### தங்கமணி கண்டனம்

கருணாநிதி இன்று வெளியிட்ட அறிக்கைக்கு சட்டசபை கம்யூனிஸ்டுகட்சித் தலைவர் கே. டி. கே. தங்கமணி கண்டனம் தெரிவித்தார்.

டெல்லியில் இன்று முதலமைச்சர்கள் கூடிப் பேசும் நேரத்தில் இப்படிப்பட்ட அறிக்கை வெளியிட்டது தேவையில்லாதது என்று தங்கமணி கூறினார்.

---

இளம்பெண் கொலை:

## கணவன் எங்கே?

சென்னை, நவ. 28—சென்னையில் ஒரு இளம்பெண் கத்தியால் குத்தப்பட்டது சம்பந்தமாக அவளுடைய கணவனை போலீசார் தேடுகிறார்கள்.

மேரி என்ற அந்த அழகி, திடீரென்று கடந்த செவ்வாய் கிழமை இரவில் கத்தியால் குத்தப்பட்டு பலத்த காயம் அடைந்தாள். அவள் நேற்று ஆஸ்பத்திரியில் மரணம் அடைந்தாள்.

இந்தக் கொலை சம்பந்தமாக போலீசார் ஒரு வழக்கு பதிவு செய்திருக்கிறார்கள்.

அந்தப் பெண் கொலை செய்யப்பட்டது சம்பந்தமாக அவளுடைய கணவன் முனுசாமியைப் போலீசார் தேடுகிறார்கள்.

சமபவத்திற்கு 2 தினங்களுக்கு முன்பு முனுசாமிக்கும் அவருடைய மனைவிக்கும் இடையே தகராறு ஏற்பட்டதாகவும். அதைத்தொடர்ந்து அந்தப் பெண், அவருடைய தாய் வீட்டிற்கு சென்றுவிட்டதாகவும கூறப்படுகிறது.

---

பாராளுமன்றத்தில் வெளியான தகவல்:

## 'கடத்தல் மன்னன்' மஸ்தானை அறிமுகம் செய்த மந்திரி

புதுடெல்லி, நவ. 28— 'கடத்தல் மன்னன்' மஸ்தானை, தன்க்கு அறிமுகம் செய்து வைத்த மந்திரி யார் என்ற விவரத்தை டெல்லி பாராளுமன்றத்தில் ஒரு எம். பி. வெளியிட்டார்.

மற்றும் மஸ்தானுடன் தொடர்பு கொண்டுள்ள மந்திரிகள் யார் யார் என்பதையும் அவர் கூறினார்.

இதுபற்றிய விவரம் வருமாறு:—

வரி ஏய்ப்புச் செய்த நட்சத்திரங்களுடன் அரசு கிரிக்கேட் விழா நடத்துவது ஒழுங்கா என்று சுயேச்சை மெம்பர் ஷமீம் அகமது ஷமீம் நேற்று பார்லிமெண்டில் கேட்டார்.

உடனே செய்தி ஒலிபரப்புத்துறை அமைச்சர் குஜ்ரால் எழுந்து, மெம்பர் கடத்தல்காரர் ஹாஜி மஸ்தானை சந்தித்தபோது, இந்த ஒழுங்கு நியதி எங்கே போச்சு என்று சூடாகக் கேட்டார்.

### அறிமுகம்செய்த மந்திரி

இதற்கு அதைவிட சூடாக பதில்வந்தது. "ஒருபத்திரிகையாளன் என்ற முறையில் நான் யாரை வேண்டுமானாலும் சந்தித்து, உண்மையை அறிய முயற்சிப்பேன். ஒரு மகாராஷ்டிர மந்திரியும் ஒரு ஜில்லா காங்கிரஸ் கமிட்டித் தலைவரும்தான் எனக்கு ஆஜி மஸ்தானை அறிமுகம் செய்து வைத்தார்கள். மஸ்தானிடமிருந்து நான் உண்மையை அறிந்தேன்" என்று கூறி மந்திரிகள் அமர்ந்திருந்த வரிசையைச் சுட்டிக்காட்டி "மஸ்தான் உங்களையெல்லாம் விசாரணைக் கூண்டில் நிறுத்தி விட்டார்" என்றார்.

### குஜ்ரால் மீது புகார்

செய்தி-ஒலிபரப்புத்துறை அமைச்சர் என்ற முறையில் குஜ்ராலே மஸ்தான் நிதி உதவிய சினிமாப் படங்களின் ஆரம்பக் காட்சிகளுக்குப் போயிருக்கிறார் என்றும் ஷமீம் கூறினார்.

தான் சாதாரணமாக சினிமாப்பட ஆரம்பக் காட்சிகளுக்குச் செல்வதில்லை எனக் கூறிய குஜ்ரால், சரியான தகவலறிந்து புகார் செய்யுமாறு ஷமீமிடம் கூறினார்.

சமீபத்தில் டில்லியில் நடந்த கிரிக்கெட் விழாவுக்கு, கறுப்புப் பண பேரங்களுக்காகவும் வரி ஏய்ப்புக்காகவும் குற்றம் சாட்டப்பட்டுள்ள சினிமா நட்சத்திரங்கள் பலரை அழைத்ததுண்டா என்று ஷமீம் கேட்டார். அவர்கள் கலந்து கொண்டதும் ராஷ்டிரபதியுடன் சேர்ந்து புகைப்படம் எடுத்துக் கொண்டதும் அவர்களுக்குத் தகாத கௌரவத்தை அளித்துள்ளது என்றார்.

ஷமீம், விஷயத்தை சரியான கண்ணோட்டத்தில் பார்க்கவில்லை என்றார் குஜ்ரால்.

இம்மாதிரி சூடான வாக்குவாதங்களைத் தவிர, சினிமா நட்சத்திர கிரிக்கெட் விளையாட்டு பற்றிய கேள்வி நிறைய தமாஷுக்கும் இடமளித்தது.

### திறந்த வெளியில் பார்லிமெண்ட்

நிஜ கிரிக்கெட்டின் தற்போதைய தரத்தைக் கருதி அதற்குப் பதில் சினிமா நட்சத்திர கிரிக்கெட்டை அரசு கொண்டு வருமா என்று புது காங்கிரஸ் மெமபர் வி. பி. சாத்தே கேட்டார். டெஸ்ட் கிரிக்கெட்டுக்குச் செய்வது போல் இனி சினிமா நட்சத்திர கிரிக்கெட்டுகளுக்கும நேர் முகவர்ணனைக்கு அகில இந்திய ரேடியோ ஏற்பாடு செய்யுமா என்று மற்றொரு மெம்பர் சங்கர் தயாள் சிங் கேட்டார்.

நாம் எப்படி இயங்குகிறோம் என்பதை மக்களுக்குக் காட்ட பார்லிமெண்ட் விவா

7-ம் பத்தி பார்க்க

---

## 100 நீர்ப்பாசன திட்டங்களின் கதி

புதுடெல்லி, நவ. 28—பல வேறு மாநிலங்களுக்கிடையே நீர்ப் பங்கீடு பற்றிய தகராறுகள் ஏற்பட்டுள்ளதன் விளைவாக, 100-க்கு மேற்பட்ட நீர்ப்பாசன திட்டங்கள் குறித்து மத்திய தண்ணீர் மின்சாரக் கமிஷன் தக்க நடவடிக்கை எடுக்க இயலவில்லை.

நீர்ப்பாசன இலாகா உதவி மந்திரி கேதார்நாத் சிங் இந்த தகவலை நேற்று ராஜ்ய சபையில் வெளியிட்டார்.

---

## டாக்டராக நடித்த காய்கறி வியாபாரி கைது

கோழிக்கோடு, நவ. 28—டாக்டர் போல நடித்து தொழில் நடத்தி நோயாளிகளுக்கு மருந்து கொடுத்து வந்த எம். டி. முகமது என்பவரை கேரளாவில் கோழிக்கோடு போலீசார் கைது செய்துள்ளனர். முகமது முன்னர் காய்கறி வியாபாரம் செய்து வந்தவர்.

"டாக்டர் எம். பி. முகமது" என்று பெயர்ப்பலகை மாட்டிக்கொண்டு ஆஸ்பத்திரி நடத்திவந்த அவர் நன்மந்தா என்னும் கிராமத்தில் கைது செய்யப்பட்டார்.

'நேஷனல் கிளினிக்' என்னும் பெயரில் அவர் கினலூர், தமரச்சேரி ஆகிய அண்டைக் கிராமங்களிலும் ஆஸ்பத்திரிகளை நடத்தி வந்தார். வைத்தியப் படிப்பு எதுவும் படிக்காத அவர் ஆஸ்பத்திரிபெயர் பலகையில் தனது பெயருக்குப் பின்னால் டாக்டருக்குரிய பட்டத்தையும் போட்டுக் கொண்டுள்ளார்.

அவர் முன்னர் உ. பி. மத்தாய் என்ற பெயரைப் பெற்றிருந்ததாகவும் பின்னர் இஸ்லாம் மதத்தில் சேர்ந்து முகமது என்று பெயர் மாற்றிக் கொண்டதாகவும் கூறப்படுகிறது. அவருடைய மனைவி ஒரு ஹோமியோபதி டாக்டர்.

---

## வைட்டமின் ஊசி போட்டதால் இளம் பெண் மரணம்

சென்னை, நவ. 28— வைட்டமின் ஊசி போட்டதால் சென்னையில் 27 வயது இளம் பெண் மரணமடைந்தாள்.

முகமது அலிம் இந்திய வைத்திய முறைப்படி டாக்டர் சர்டிபிகேட் வாங்கியவர். அவர் அரசு ஆஸ்பத்திரி ஒன்றில் சிப்பந்தியாக வேலை பார்ப்பவர்.

அவர் எருக்கஞ்சேரி பகுதியில் டாக்டர் தொழில் நடத்தி வருகிறார்.

கடந்த 26-ந் தேதியன்று பர்மா அகதியான வத்தாசலம் என்னும் 26 வயது இளம் பெண் ஜுரம், பலவீனம காரணமாக சிகிச்சை பெற வந்தார்.

அப்பெண்ணுக்கு முகமது அலிம் 'பி-12 வைட்டமின் ஊசி போட்டார். இதன் விளைவாக அவருக்கு உடலில் பாதக விளைவு ஏற்பட்டது. ஸ்டான்லி ஆஸ்பத்திரிக்கு சிகிச்சைக்காக கொண்டு செல்லப்படும வழியில் வத்தாசலம இறந்தார்.

### மருந்து பறிமுதல்

இது சமபந்தமாக போலீசார் ஒரு வழக்குப் பதிவு செய்து புலன் விசாரணை நடத்தி வருகின்றனர்.

முகமது அலிம் ஊசிபோடப் பயன் படுத்திய சிரிஞ்ச், மருந்து அடங்கிய குப்பி முதலியவை கைப்பற்றப்பட்டுள்ளன.

இச் சம்பவம்பற்றி ஆராயுமாறு மருந்து துணை கண்ட்ரோலர் கேட்டுக் கொள்ளப்பட்டுள்ளார்.

---

# தமிழ்நாட்டில் அரிசி விலை குறைகிறது

சென்னை, நவ. 28— தமிழ்நாட்டில் வருகிற டிசம்பர் மாதம் முதல் ரேஷன் அரிசியின் விலை குறைகிறது.

இந்தத் தகவலை இன்று தமிழ்நாடு உணவு இலாகா செயலாளர் சிவசுப்ரமணியம் நிருபர்களிடம் கூறினார்.

இதுகுறித்து அவர் கூறியதாவது. மாநிலம் முழுவதிலும் அரிசி விலையை சீரமைக்கத் திட்டமிடப்பட்டுள்ளது.

இத்திட்டத்தின் படி, சென்னை, கோவை, கன்னியாகுமரி ஆகிய 3 மாவட்டங்கள் தவிர மற்ற மாவட்டங்கள் முழுவதும் தற்போது வழங்கப்படும் ரேஷன் அரிசி ஒரு கிலோவுக்கு 40 காசு குறைக்கப்படுகிறது. இது வருகிற டிசம்பர் மாதம் முதல் அமுலுக்கு வருகிறது.

சென்னை, கோவை, கன்னியாகுமரி ஆகிய 3 மாவட்டங்களிலும், வருகிற டிசம்பர் முதல் 1 கிலோவுக்கு 50 காசு விலை உயர்த்தப்படுகிறது.

தற்போது சென்னையில் மோட்டாரக அரிசி ரூ. 1-30க்கும், நடுத்தர ரகம் ரூ. 1-40க்கும், உயர்தர ரகம் ரூ. 150க்கும், மிக உயர்ந்த ரகம் ரூ. 1-60க்கும் வழங்கப்பட்டு வருகிறது.

இவை ஒவ்வொன்றுக்கும் ஒரு கிலோவுக்கு 50 காசு கூடுதலாக சென்னையில் விற்கப்படும்.

மற்ற மாவட்டங்களில் மோட்டா ரகமும நடுத்தர ரகம் ஒரு கிலோ ரூ. 2-02க்கும், உயர் ரகம் ரூ. 2-30க்கும் மிக உயர் ரகம் ரூ. 2-50-க்கும் தற்போது விற்கப்பட்டு வருகிறது. இவை வருகிற டிசம்பர் மாதம்முதல் ஒவ்வொரு ரகத்திற்கும் ஒரு கிலோவுக்கு 40 பைசா குறைத்து விற்கப்படும்.

இவ்வாறு சிவசுப்ரமணியம் கூறினார்.

---

## என். ஜி. ஓ. போராட்ட குழு

சென்னை, நவ. 28—என். ஜி. ஓ. க்களின் அகவிலைப்படி உயர்வு சம்பந்தமாக ஆராய போராட்டக் குழு சென்னையில் கூடுகிறது.

தங்களது கோரிக்கைகள் குறித்து இதுவரை அரசு எந்த விதமான முடிவுகளையும் எடுக்காதது ஏமாற்றத்தை அளிப்பதாக என். ஜி. ஓ. சங்கம் தெரிவித்துள்ளது.

டெல்லிக்கு சென்றிருக்கும் முதலமைச்சர் கருணாநிதி சென்னை திரும்பியதும் சங்கத் தலைவர்கள் சந்தித்துப் பேச இருக்கிறார்கள்.

அதனை அடுத்து டிசம்பர் முதல் தேதி சென்னையில் போராட்டக் குழு கூடி அடுத்த நடவடிக்கை பற்றி ஆலோசிப்பார்கள்.

---

## கதர் விற்பனை கூடியது

கோவை, நவ. 28—திருப்பூர் வீரபாண்டி சர்வோதய சங்கக் கிளைகளில் இந்த ஆண்டு தீபாவளி கதர் விற்பனை ரூ. 5 லட்சத்து 50 ஆயிரத்து 362 ஆகியுள்ளது. இது சென்ற ஆண்டைவிட ரூ. 1 லட்சத்து 11 ஆயிரத்து 454 அதிகமாகும்.

---

# ஓட்டல் அதிபர்களுக்கு கோவை மாணவர்கள் மூன்று நாள் 'கெடு'

சென்னை, நவ. 28— கோவை அரசினர் கல்லூரி மாணவர்கள், ஓட்டல் அதிபர்களுக்கு 3 நாள் கெடு விடுத்துள்ளனர்.

அதற்குள் ஓட்டல் பண்டங்களின் விலையைக் குறைக்காவிட்டால் நேரடி நடவடிக்கையில் இறங்குவோம் என்று அவர்கள் எச்சரித்துள்ளனர்.

கோவை அரசினர் கலைக் கல்லூரியைச் சேர்ந்த சுமார் 2 ஆயிரம் மாணவர்கள் இன்று அந்தக் கல்லூரியிலிருந்து புறப்பட்டு நகரின் முக்கிய சாலைகள் வழியே ஊர்வலமாக கலெக்டர் அலுவலகத்திற்குச் சென்றனர். ஆறுமுகசங்கர் மோகன், இந்த ஊர்வலத்திற்கு தலைமை வகித்தார்.

கலெக்டரிடம் ஒரு மகஜரை மாணவர்கள் பிரதிநிதிகள் கொடுத்தனர்.

ஓட்டல், பலகாரங்களின் விலை தாறுமாறாக உயர்ந்துள்ளது என்றும், அதனால் பொது மக்களும், மாணவர்களும் பாதிக்கப்பட்டிருக்கிறார்கள் என்றும் மகஜரில் கூறப்பட்டுள்ளது.

டாக்சி, ஆட்டோ ரிக்ஷா வண்டிகளுக்கு கட்டணம் நிர்ணயிக்கப்பட்டுள்ளது போல, ஓட்டல் பலகாரங்களுக்கும் விலை நிர்ணயிக்க அரசு முன்வரவேண்டும் என்று அந்த மகஜரில் கூறப்பட்டுள்ளது. இதற்காக 3 நாள் கெடு கொடுக்கப்பட்டுள்ளது.

அடுத்த 3 நாட்களில் இவ்விதம் விலை நிர்ணயிக்கப்படாவிட்டால், மாணவர்கள் நேரடி நடவடிக்கைகளில் ஈடுபடுவார்கள் என்று மகஜரில் எச்சரிக்கப்பட்டுள்ளது.

---

(2-ம் பத்தி தொடர்ச்சி)

தம் திறந்தவெளி அரங்கில் நடத்தப்படுமா என்று எஸ். எம். பானர்ஜி கேட்டார்.

உங்களையெல்லாம் நிதானப் படுத்த அப்படிச் செய்தால் நன்றாக இருக்கும் என்றார் சபாநாயகர்.

### சட்டத்திற்கு பயந்த நட்சத்திரங்கள்

பாதுகாப்புச் சட்டத்திற்குப் பயந்தே ஏராளமான சினிமா நட்சத்திரங்கள் டெல்லி கிரிக்கெட் விழாவில் கலந்து கொண்டிருக்கிறார்கள் என்று ஒரு படத் தொழில் பிரமுகர் டெலிவிஷன் பேட்டியில் கூறியிருப்பதை ராவ் வீரேந்திர சிங் சுட்டிக் காட்டினார். அதனால் தான் அவர்கள் பணம் எதுவும் கேளாமல் சொந்தச் செலவில் வந்து தங்கிப் போயிருக்கிறார்களோ என்றார்.

மெம்பர்களுக்கு ஹாஸ்ய உணர்ச்சி வேண்டும் என்று உதவி மந்திரி கூறினார்.

---

# பெண் தகராறில் இளைஞர் கொலை

சென்னை, நவ 28—பெண் தகராறு காரணமாக தாம்பரம் அருகே மணி என்னும் இளைஞர் கொலை செய்யப்பட்டார்.

26 வயதான மணி என்னும அந்த இளைஞர் தாம்பரம் சோதனைச்சாவடியில் கூலி வேலை செய்துவந்தார். அதே சோதனைச்சாவடியில் வேலை பார்த்துவந்த மற்றொருவருக்கும், மணிக்கும் பெண் தகராறு சம்பந்தமாக கடந்த 26-ந் தேதி தகராறு ஏற்பட்டு சண்டை மூண்டது.

அச்சண்டையின் போது மணி மரக்கட்டையால் தாக்கப்பட்டார். அதனால் அவருக்கு மண்டையில் பலத்த காயம் ஏற்பட்டது.

தாம்பரம் போலீசார் அன்றைய தினமே மணியை ஜெனரல் ஆஸ்பத்திரியில் கொண்டுவந்து சேர்த்தனர். மண்டையில் ஏற்பட்ட காயத்தால் மணி இறந்தார்.

மணியை அடித்தவர் தலைமறைவாக இருப்பதாகக் கூறப்படுகிறது.

தாம்பரம் போலீசார் புலன் விசாரணை செய்து வருகின்றனர்.

## சவான் டாக்கா விஜயம்

டாக்கா, நவ. 28— இந்திய வெளிவிவகார மந்திரி சவான் அடுத்த மாதம் 7-ந் வங்க ள தேஷுக்கு விஜயம் செய்து 3 நாட்கள் தங்கியிருப்பார். அப்போது அவர் முக்கிய பேச்சுவார்த்தைகளை நடத்துவார்.

சவான் வெளிவிவகார மந்திரியான பிறகு வங்காள தேஷ் விஜயம் செய்வது இதுவே முதல் தடவையாகும்.

## சென்னை-புதுக்கோட்டை பஸ்

சென்னை, நவ. 28— சென்னை, புதுக்கோட்டை நகரங்களுக்கிடையே புது வழித் தடத்தில் ... விட தமிழ்நாடு அரசாங்க பஸ் போக்குவரத்து இலாகா தீர்மானித்துள்ளது.

இந்த வழித்தடத்தில் சென்னையிலிருந்து முதலாவது பஸ், டிசம்பர் 1-ந் தேதியன்றும், புதுக்கோட்டையில் இருந்து முதலாவது பஸ் டிசம்பர் 2-ந் தேதியன்றும் விடப்படும்.

திண்டிவனம், பண்ணுருட்டி கும்பகோணம், தஞ்சாவூர் நகரங்கள் வழியாக இந்த பஸ் விடப்படும்.

தற்போது சென்னை-தஞ்சாவூர் வழித்தடத்தில் செல்லும் பஸ்கள், வருகிற 1-ந் தேதியிலிருந்து புதுக்கோட்டைக்கு நீடிக்கப்படும்.

# பூட்டிய அறைக்குள் 2 இளம் அழகிகளுடன் வாலிபர் பட்டபாடு

ஜுனகத் (குஜராத்), நவ. 28— பூட்டிய அறைக்குள் 2 அழகிகளுக்கு மத்தியில், தான் பட்ட பாட்டை போலீசாரிடம் கூறினார் ஒரு வாலிபர்.

அழகிகளின் இந்தத் துணிகரச் செயல் பற்றிய விவரம் வருமாறு:—

பையன் ஜோராக இருப்பான். அத்துடன் பாங்கிலும் வேலை. சொல்லவேண்டியதில்லை. பாவையர் இருவர் அவனைக் காதலித்தார்கள். அவனும் அவர்களைக் காதலித்தான். ஜுனகத்தில் இவ்வாறு இன்பகரமாகக் காலம் ஓடிக்கொண்டிருந்தது.

அவன் இரண்டு பேரைக் காதலிப்பது அந்த இருவருக்குமே தெரிந்துவிட்டது.

### காதலியை மறந்தான்

திடீரென்று அவனுக்கு மாறுதல் உத்தரவு வந்தது, பக்கத்தில் உள்ள ராஜ்கோட் நகருக்குப் போகும்படி. அவனும் போய் விட்டான். அவர்களைப் பற்றி அவனுக்குக் கவலையில்லை. புதிதாக ஒன்றைத் தேடிக் கொண்டால் போகிறது என்று இருந்தானே என்னவோ?

ஆனால் இரண்டு பெண்களுக்கும் தாளவில்லை. ஏமாற்றிவிட்டானே என்று ஆத்திரமடைந்தார்கள். மேலும் தங்கள் உள்ளங் கவர்ந்தவனை விடவும் மனமில்லை. இரண்டு பேரும் ஒன்று சேர்ந்தார்கள். ராஜ்கோட்டுக்கு அவனைவிரட்டிக் கொண்டு போனார்கள். அவனை வலுக்கட்டாயமாக ஜுனகத்துக்கு இழுத்துக் கொண்டு வந்தார்கள்.

இதற்குப் பின்பும் அவர்கள் என்ன செய்தார்கள்? அவனே ராஜ்கோட் போலீசாரிடம் சொன்னான். அவன் சொன்ன புகாரை கேளுங்கள்:

### பூட்டிய அறையில்

"இரண்டு பேரும் சேர்ந்து என்கடிகாரத்தையும் பையில் வைத்திருந்த ரூ.200யும்பறித்துக்கொண்டார்கள். என்னை ஓர் அறையில் போட்டு பூட்டினார்கள். கெஞ்சினேன் விடவில்லை. வெளியே போக வேண்டுமானால் ஒரு மாஜிஸ்திரேட்டிடம் போகவேண்டும்; அவர்களில் ஒருத்தியை நான் திருமணம் செய்து கொள்வதாக அவர் முன் பிரதிக்ஞை செய்து தர வேண்டும் என்றார்கள். எப்படியோ தப்பினேன். ஒரு டாக்சியைப் பிடித்துக் கொண்டு ராஜ்கோட்டுக்குப் பறந்து வந்து விட்டேன்"

## ஏழை பெண்ணுக்கு திருமணம்

4 பக்கத் தொடர்ச்சி

அய்யர் அவருடைய மகள் அவயாம்பாள்.

அந்தஅவயாம்பாளுக்கு திருமணம் நிச்சயித்து டிசம்பர் முதல்தேதி திருமணம் நடக்க இருக்கிறது. சைதாப்பேட்டை காரணீஸ்வரர் ஆலயத்தில் திருமணம் நடப்பதாக பத்திரிகையும் அச்சிட்டுவிட்டார்.

ஆனால் திருமணத்தை நடத்த கையில் பணம் இல்லை வழி தெரியாது விழித்துக் கலங்கிய அவர் என்னை தேடி வந்தார் உதவி கோரினார்.

800 சிறுவர் ஆதரவு என் முன்னே நிழல் ஆடியது. அவர்கள் சார்பாக அவர்களுக்குஅபயம் கொடுத்தேன். 800 மாணவர்களும் தலா ஒரு ரூபாய் வீதம் தர முன்வந்துவிட்டார்கள். 800 ரூபாய் வசூலாகிவிட்டது.

### பள்ளியில் ஜாம்ஜாம் கல்யாணம்

கல்யாணத்தை எங்கள் பள்ளியிலேயே நடத்த முடிவு செய்தேன்.

இதைஅந்தப் பெண்ணிடம் சொன்னேன்.

எப்படியாவது எனக்குக் கல்யாணம் நடக்க வேண்டும். தாம்பாளத்தை தட்டி ஒலி செய்தாவது கல்யாணத்தைமுடிக்கும்படி அவர் சொல்லிவிட்டார். மாமி நீங்கள் மேளமே கொட்டி கல்யாணம் நடத்த ஒப்புக்கொண்டு விட்டீர்களே என்று அந்தப் பெண் ஆச்சர்யம் அடைந்தாள்.

பெண் வீட்டார் 25 பேர் பிள்ளை வீட்டார் 2 பேர் ஆக 50 பேருக்கு கல்யாண விருந்து. ஜாம், ஜாம் என்று கல்யாணம் நடக்கப் போகிறது. நீங்களும் வாருங்கள் என்று நிருபர்களை சாவித்திரி அழைத்தார்.

### நிருபர்கள் தந்த நிதி உதவி

இந்த மணப்பெண்ணுக்கும் திருமங்கல்யம், கூறைப் புடவை கொடுக்கப் போகிறோம். புரோகிதர், நாதஸ்வரம் ஆகிய எல்லா ஏற்பாடுகளையும் செய்து இருக்கிறோம்.

நிருபர்களும் தங்கள் பங்கு இது என்று ஆளுக்கு ஒரு ரூபாய் அளித்தார்கள்.

இந்தப் பெண்ணை திருமணம் செய்து கொள்ளப் போகிறவர் பெயர் வேம்புநாதன்.

பாஸ்டன் நிலயம் செய்து வரும் பணிகள் பற்றி சாவித்திரி அம்மாள் மேலும் கூறியதாவது:—

பள்ளியை விரிவு படுத்த கேசவ பெருமாள்புரத்திலும் நந்தனத்திலும் இடம் பெற்று இருக்கிறோம்.

நந்தனத்தில் கல்லூரி ஒன்றை துவக்க ஏற்பாடுகள் செய்து வருகிறோம்.

### பிரசவ வலியுடன் மாட்டுவண்டி பிரயாணம்

என்னுடைய பிறந்த ஊர் தஞ்சைமாவட்டத்தில் உள்ள நீடாமங்கலம். அங்கே உள்ள மருத்துவ மனையில் மகப்பேறு வசதிக்கு படுக்கை வசதிகள் இல்லை.

அந்த ஊர் பஞ்சாயத்து தலைவர் ராஜகோபால் இது பற்றி என்னிடம் தெரிவித்தார். அந்த ஊரைச்சுற்றி 16 சிறு கிராமங்கள் இருந்திருக்கின்றன.

பிரசவ வலி எடுத்ததும் மாட்டு வண்டியில் ஏற்றி வருவார்கள். ஆனால் அங்கே வசதி இல்லாததால் மன்னார்குடிக்கு அனுப்புவார்கள்.

இந்த நிலைக்கு முற்றுப் புள்ளி வைக்க சிறு கட்டிடம் கட்டி அதில் 3 படுக்கை வசதிகள் செய்துதர ஒப்புக் கொண்டு இருக்கிறேன். இதற்கு ரூ. 15 ஆயிரம் செலவாகும்.

29-ம தேதி விழாவில் இது பற்றி அறிவிக்க இருக்கிறேன்.

இது தவிர மாம்பலம் தீ விபத்தில் பாதிக்கப்பட்ட குடும்பத்திற்கு நிதி உதவியும் தர இருக்கிறோம் என்றார்.

சிறியஇடத்தில்இருந்தாலும் பெரிய மனதுடன் செயல்படும் இந்த நிறுவன விழாவுக்கு அமைச்சர் ராமச்சந்திரன் தலைமை வகிக்கிறார். அவருடைய மனைவி சாந்தி ராமச்சந்திரன் ஆசிரியர்—பெற்றோர் உறவு சங்கத்தை துவக்கி வைக்கிறார்.

அந்தப் பள்ளியின் பிரின்ஸ்பால் ராஜப்பாவும் பல விவரங்களை தெரிவித்தார்.

# மது விற்க உரிமை கோர முடியாது: சுப்ரீம் கோர்ட் தீர்ப்பு

புதுடெல்லி, நவ. 28— "மதுபானங்களை விற்பனை செய்ய தங்களுக்கு அரசியல் சட்டப்படி அடிப்படை உரிமை உள்ளது என்று தனிப்பட்டவர் யாரும் உரிமை கோர முடியாது" என்று சுப்ரீம் கோர்ட் தீர்ப்புக் கூறியுள்ளது.

மதுபானங்களைத் தயாரிப்பதற்கும், விற்பதற்கும் முற்றிலும் அரசாங்கத்துக்குத்தான் உரிமை உள்ளது என்றும் சுப்ரீம் கோர்ட் தனது தீர்ப்பில் கூறியுள்ளது.

அன்னிய மது விற்பனைசெய்வதற்கான லைசென்சை பகிரங்கமாக ஏலம்விட்டு, அதிக பட்ச தொகையைக் கூறுபவர்களுக்கு அந்த உரிமையை வழங்குவதென்று மத்தியப் பிரதேச அரசும் கேரள அரசும் முடிவுசெய்துள்ளன.

இதை ஆட்சேபித்து மது விற்பனையாளர்கள் சுப்ரீம் கோர்ட்டில் வழக்குப் போட்டனர்.

மதுவிற்பனை செய்ய அரசியல் சட்டப்படி தங்களுக்கு அடிப்படை உரிமை உண்டு என்றும், இந்த அரசுகளின் முடிவுகள், தங்களுடைய இந்த உரிமையைப் பாதிக்கின்றன என்றும் அவர்கள் வாதித்தனர்.

இதை சுப்ரீம்கோர்ட் ஏற்கவில்லை. மது விற்பனை செய்ய தனிப்பட்ட எவரும் அரசியல் சட்டத்தைக் காட்டி உரிமை கோரமுடியாது என்று சுப்ரீம் கோர்ட் தீர்ப்பளித்து அவர்களுடைய மனுக்களை நிராகரித்தது.

## சென்னை மார்க்கெட்

சென்னை, நவ. 28—

**தங்கம்**

(24 காரட்) சுத்த தங்கம் 10 கிராம் ரூ. 536 00
(22 காரட்) சில்லரை கிராம் ரூ. 51.00

**வெள்ளி**

பார் வெள்ளி (1 கி. கி.) ரூ. 1155 00
உள்ளூர் 1100 00
(வெள்ளி 10 கிராம்) ரூ. 11 65

**மணிலாப்பயறு**

மாரிகால பட்டாணி மொத்த விலை ரூ. 290 00

**மணிலா எண்ணெய்**

மொத்த விலை ரூ. 760 00
சில்லரை விலை ரூ. 8 00

**விளக்கெண்ணெய்**

(100 கி. கி.) சென்னை கிடங்குடெலிவரிதிருப்பத்தூர் மொத்த விலை ரூ. 590 00
சேலம் தாமரை அன்னம் மார்க் (16 05 கி. கி.) ரூ. 92 00

**தேங்காய் எண்ணெய்**

(16.06 கி. கி.) டின் எம்.எஸ்.மார்க் ரூ. 215 00
முதல் ரூ. 220 00

**நல்லெண்ணெய்**

17 கி. கொண்ட டின் 1-க்கு (அக்மார்க் குருபரன் மார்க்) ரூ. 147 50
விற்பனை வரி தனி
சில்லரை கிலோ 1-க்கு ரூ. 9 25

**கடலைப்பிண்ணாக்கு**

கி.கி. கொண்ட மூட்டைக்கு 70 எக்ஸ்பெல்லர் ரூ. 82 00

**சர்க்கரை**

பகிரங்க மார்க்கெட் விலை 100 கி. கி. ரூ. 512 00
முதல் ரூ. 514 00

## மின் கட்டணம் குறைக்க மில் அதிபர்கள் கோரிக்கை

சென்னை, நவ. 28— கோவையிலிருந்து தென்னிந்திய மில் உரிமையாளர்கள் சங்க சார்பிலான தூதுக்குழுவினர் நேற்று கோட்டையில் மின்சார அமைச்சர் ஓ. பி. ராமனை சந்தித்துப் பேசினர்.

மில்களுக்கான மின்சாரக் கட்டணத்தைக் குறைக்க வேண்டும் என்று அவர்கள் கோரினர்.

இதுபற்றி ஆராய்வதாக அமைச்சர் கூறினர்.

'ஏறிய ஏணியை எட்டி உதைப்பதா?'

# தமிழ்நாட்டின் சாபக் கேடு: சிவாஜி கவலை

காஞ்சிபுரம், நவ. 28— ஏறிய ஏணியை எட்டி உதைப்பதும், நன்றியை மறப்பதும், காலை வாரிவிடுவதும் தமிழ்நாட்டின் சாபக்கேடாக அமைந்துவிட்டது என்று சிவாஜி கணேசன் வேதனையுடன் கூறினர்.

காஞ்சிபுரம் நகர சிவாஜி கணேசன் ரசிகர் மன்றம் சார்பாக நேரு பிறந்த நாள் விழா கொண்டாடப்பட்டது.

விழாவுக்கு சந்தானம் தலைமை வகித்தார். இந்த விழாவில் சிவாஜி கணேசன் பேசும்போது கூறியதாவது:-

இன்று நாட்டில் சாதனைகள் செய்யப்போவதாகபேசி வருபவர்களை மக்கள் புரிந்து கொள்ள வேண்டும். முன்பு இருந்த கட்சியில் இவர்கள் சாதித்தது என்ன? சாதித்தவன்தான் சாதனைகளை சொல்லுவான். சாதனையிருந்தால் தானே சொல்ல முடியும் என்றார்.

### அ. தி. மு. க. மீது தாக்கு

இவர்கள் எங்கிருந்து வந்தார்கள். இவர்கள் பாரம்பரியம் என்ன? முன்பு என்ன சொன்னார்கள். இப்போது என்னபேசுகிறார்கள்என்பதை மக்கள் உணர்ந்து பார்க்க வேண்டும். நான் கடந்த தேர்தலின்போது கூறினேன் பேச்சால் மயக்குகிறவர்களை ஆட்சிக்கு அனுப்பாதீர்கள். இவர்களுக்கு மக்களை மயக்கும் வசனம்தான் பேசத் தெரியும்—மக்களைப்பற்றி இவர்களுக்குத் தெரியாது. மக்களைப்பற்றி கவலைப்படமாட்டார்கள் என்று கூறினேன். நீங்கள் கேட்கவில்லை இன்று அதன் பலனை அனுபவிக்கிறோம்.

நிழல் தரும்ஆலம்விருட்சம் போன்றவர் தலைவர் காமராஜ்.

காஞ்சியிலிருந்து சென்ற நான் ஆற்றை கடந்து காடுகளை தாண்டி, பல துன்பங்களை ஏற்று கவர்ச்சியினால் ஏமாந்து பிறகு காமராஜ் என்ற ஆலம் விருட்சத்தின் கீழ் வந்த நான் அந்த விருட்சத்தின் கீழ் இருப்பதில் பெருமை கொள்கிறேன். காமராஜ் என்ற விருட்சம் தேசத்தை காக்கும், தேசத்திற்கு நிழல்தரும் விருட்சம். அந்த விருட்சத்தின் கீழ் இன்று லட்சக்கணக்கான இளைஞர்கள் அணிவகுத்து நிற்கிறார்கள். காமராஜ்என்ற விருட்சத்தின் கீழ் நிற்பவர்களுக்கு நாட்டைப் பற்றியும் மக்களைப் பற்றியும் தான் கவலை ஏற்படும்; அதனால்தான் மக்களைப் பார்த்து சொல்லுகிறோம் நாடு நலம் பெற நல்ல தலைவரை பின்பற்றுங்கள். நல்ல தலைவரை பற்றினால் நாட்டிற்கு நன்மை ஏற்படும். நம் நாட்டிற்கு நன்மை உண்டாகும்.

### காலைவாரி விடுவதா?

நேருஜி இந்த தேசத்திற்காக பாடுபட்டார். தேச விடுதலைக்காக தனது குடும்பத்தையே தியாகத் தீயில் குதிக்கச் செய்தார்.

அப்பப்பட்ட தியாகத் தலைவர் சோஷலிச சமுதாயம் அமைய, ஏழை எளிய மக்கள் நல்வாழ்வு பெற காமராஜிடம் கட்சிப பொறுப்பை ஒப்படைத்தார். தலைவர் காமராஜை அகில இந்திய காங்கிரஸ் தலைவராக்கினர்.

நேரு விழா கொண்டாடும் இந்த நேரத்தில் நாம் நேருஜி காட்டிவிட்டு சென்ற பாதையில் செல்ல வேண்டும்.

தமிழ்நாட்டின் சாபக்கேடு ஏறிய ஏணியை எட்டி உதைப்பது, காலை வாரி விடுவது, நன்றியை மறப்பது, காமராஜின் ஆட்சியில் ஏற்பட்ட நன்மைகளை மறந்து விட்டதால் இன்று பல கஷ்டங்கள் ஏற்பட்டு வருகின்றன. இதை மக்கள் உணர வேண்டும். இவ்வாறு சிவாஜி கணேசன் கூறினர்.

பக்தவத்சலம் பாலிடெக்னிக் கல்லூரி மாணவர்கள், ஸ்ரீபெரும்பூதூர் ரசிகர்கள் வரவேற்பு அளித்தனர்.

பச்சையப்பன் கல்லூரியில் தமிழ்மன்றத்தை சிவாஜி கணேசன் துவக்கிவைத்தார்.

## கிசிங்கர்-சூஎன்லாய் சந்திப்பு

பீகிங், நவ. 28— அமெரிக்க வெளிநாட்டு இலாகா மந்திரி கிசிங்கர் நேற்று முன் தினம்சினப்பிரதமர் சூஎன்லாயைச் சந்தித்துப் பேசினர்.

சூஎன்லாய் சிகிச்சைபெற்று வருகிற, ஆஸ்பத்திரி ஒன்றில் இந்த சந்திப்பு நடந்தது.

பின்னர் கிசிங்கருக்கு சீனாவின் புதிய வெளிநாட்டு மந்திரி சியாவ் குவான் ஹூவா விருந்து பசாரம் நடத்தினர்.

கிசிங்கருடன் அவருடைய மனைவி வந்துள்ளார்.

சீனாவுக்கு கிசிங்கர் வந்திருப்பது இப்போது 7-வதுதடவையாகும்.

## கைத்தறி தொழிலாளர் கோட்டைக்கு ஊர்வலம்

சென்னை, நவ. 28—கைத்தறித் தொழிலாளர்கள் நேற்று காலையில் நேப்பியர் பூங்காவிலிருந்து ஊர்வலமாக கோட்டைக்கு சென்றனர்.

நெசவுத் தொழில் நெருக்கடியை அரசுக்கு எடுத்துச் சொல்லும் வகையில் சர்வ கட்சியைச் சேர்ந்த ஆயிரக்கணக்கானவர்கள் இந்த ஊர்வலத்தில் கலந்துகொண்டனர்.

கைத்தறித் தொழிலாளர்களின் சார்பில் அனைத்துக் கட்சிப் பிரமுகர்களும் அமைச்சர் ப. உ. சண்முகத்தை சந்தித்து மகஜர் ஒன்றை அளித்தனர்.

அமைச்சர் ப. உ. சண்முகம் இதுகுறித்து நிருபர்களிடம் தெரிவித்ததாவது:

தேங்கிக்கிடக்கும் கைத்தறித் துணிகள முழுவதையும் அரசாங்கமே கொள்முதல் செய்து கைத்தறித் தொழிலாளர் பிரச்னையைத் தீர்த்து கஷ்டத்தைப் போக்கும்படி அவர்கள் மகஜரில் கோரிக்கை விடுத்திருந்தனர்.

இன்று முதலமைச்சரும், தொழிலமைச்சரும், நானும் காவிரிநதிநீர் பிரச்னை குறித்து பேச டெல்லிபோகக் கூடும். டெல்லி சென்றால் அப்போது கைத்தறித் தொழிலாளர் பிரச்னைகுறித்து நமது முதலமைச்சர் மத்திய அமைச்சரிடம் எடுத்துச் சொல்வார்.

மத்திய அரசு அனுமதித்தால் ஒழிய இந்தப் பிரச்சினையை நாமாகத் தீர்க்க முடியாது என்று கைத்தறித் தொழிலாளர்களின் பிரதிநிதிகளிடம் தெரிவித்தேன்.

இவ்வாறு அமைச்சர் ப. உ. சண்முகம் கூறினர்.

ரெயில்வே தொழிலாளர் தேசிய சம்மேளனத்தின் தலைவராக தேர்ந்தெடுக்கப்பட்ட டி. வி. ஆனந்தனுக்கு சென்னையில் பாராட்டு விருந்து நடத்தப்பட்டது. பழைய காங்கிரஸ் கமிட்டி தலைவர் பி. ராமச்சந்திரன் இதில் கலந்து கொண்டார்.

# ரெயிலில் 'ஓசி'ப் பயணம் செய்பவர் 17 லட்சம் பேர்

சென்னை, நவ. 28—ரெயில்களில் இந்தியா முழுதும் ஒவ்வொரு வருடமும 17 லட்சம பேர் டிக்கெட் வாங்காமல் ஓசிப் பயணம செய்கின்றனர் என்று கண்டுபிடிக்கப்பட்டுள்ளது.

டிக்கெட்டில்லாமல் பிரயாணம் செய்பவர்களில் அகப்பட்டுக் கொள்பவர்களிடமிருந்து ரூ. 1·80 லட்சம் அபராதம் வசூலிக்கப்பட்டிருக்கின்றது.

வடக்குப்பகுதிகளில் ரெயில்வேயில் டிக்கெட் இல்லாமல் பயணம்செய்வதுடன் காலித்தனமும் அதிகமாக உள்ளதாம். தென்னிந்தியாவில் அம்மாதிரியான காலித்தனங்கள் நடப்பதில்லை. இது ஒரு ஆய்வில் கண்டுபிடிக்கப்பட்டு அறிவிக்கப்பட்டுள்ளது.

கற்பழித்துக் கொன்ற ஆசாமிக்கு போலீஸ் வலை வீச்சு

# ரத்த வெள்ளத்தில் கிடந்த இளம் அழகி: ஆஸ்பத்திரியில் சாவு

சென்னை, நவ. 28—சென்னையில் 18 வயது இளம் பெண்ணின் மார்பகங்கள் அறுக்கப்பட்டு கொலை செய்யப்பட்டாள். கொலைக்காரர்கள் இந்தப் பெண்ணை கற்பழித்து பிறகு மார்பகங்களை அறுத்தார்களாம்.

இது குறித்து விவரமாவது: சென்னை ஜார்ஜ் டவுனைச் சேர்ந்தவள் மீரா (வயது 18) செவ்வாய்க்கிழமை இரவு, மீரா சட்டக் கல்லூரி அருகில் உள்ள விளையாட்டு மைதானம் அருகில் போய்க்கொண்டு இருந்தபோது, யாரோ சிலர் திடீரென்று அவளைப் பிடித்து இழுத்துக்கொண்டு, மறைவான இடத்துக்கு கொண்டு சென்றிருக்கிறார்கள்.

அவளை பலவந்தமாக கற்பழித்த பிறகு, அவளது வயிற்றில் கத்தியால் குத்தி, 2 மார்பகங்களையும் அறுத்துவிட்டதாக கூறப்படுகிறது.

அவளை அப்படியேபோட்டுவிட்டு, அவர்கள் ஓடிவிட்டார்கள்.

கத்திக்குத்துக் காயங்களுடன் உயிருக்கு மன்றாடிக் கொண்டு இருந்த மீராவை, அந்த வழியாக வந்தவர்கள் தூக்கிப்போய் சிகிச்சைக்காக சென்னை பெரிய (ஜெனரல்) ஆஸ்பத்திரியில் சேர்த்தார்கள்.

சிகிச்சை பலன் அளிக்காததால், மீரா பரிதாபமாக செத்தாள்.

அதுபற்றி போலீசார் தீவிர விசாரணை நடத்தி வருகிறார்கள்.

## மனம் தளரவில்லை: பட்டாடி பேட்டி

பெங்களூர், நவ. 28—பெங்களூர் கிரிக்கெட் டெஸ்ட் பந்தயத்தில் மேற்கிந்தியக்குழுவிடம் தோற்றதால் நாங்கள் ஏமாற்றம் அடைந்துள்ளோம். ஆனால் மனம் தளர்ந்துவிட வில்லை" என்று இந்திய கிரிக்கெட் கேப்டன பட்டாடி ஒரு பேட்டியில் கூறியுள்ளார்.

"எங்களுடைய 'பீல்டிங்' சரியாக இல்லை" என்று அவர் ஒப்புக்கொண்டார்.

"பேட்டிங் பற்றிக் குறிப்பிடுகையில் வெளியே போகிற பந்தை நோக்கி அனாவசியமாக பேட்டை நீட்டும் தப்பைத் தொடர்ந்து செய்கிறோம்" என்றார் பட்டாடி.

பட்டாடிக்கு இடது கை மோதிர விரலில் நல்ல அடி பட்டுள்ளதால் 10 நாள் ஓய்வளிக்கும்படி அவருக்கு டாக்டர் கூறியுள்ளார். என்ஜினியருக்கு வலது கண் அருகே காயம் பட்டுள்ளது. ஒரு வாரம் ஓய்வெடுக்க அவருக்கு ஆலோசனை கூறப்பட்டுள்ளது.

மேற்கிந்தியக் குழுவின் மானேஜர் அலெக்சாண்டர் தனதுகுழுவின்வெற்றிபற்றிக் குறிப்பிடுகையில் லாயிட்டின் அபார ஆட்டம் காரணமாகவே வெற்றி கிட்டியது என்றார்.

லாயிட்டுக்கும் உடல்நலம் சரியில்லை. அவரும் ஓய்வெடுத்து வருகிறார்.

மேற்கிந்திய குழுவுடன் இரண்டாவது டெஸ்ட் பந்தயம் டெல்லியில் டிசம்பர் 11-ந் தேதி ஆரம்பமாகும்.

## நாளைய நிகழ்ச்சி

பாஸ்டன் ஹையர் செகண்டரி ஸ்கூல்; பள்ளியின் நிறுவனர் தினமும், மாதர் தினமும், 'பெற்றோர்—ஆசிரியர்' கழகத் துவக்க விழாவும் நடைபெறும். போக்குவரத்துத்துறை அமைச்சர் எஸ். ராமச்சந்திரன் தலைமை வகித்துத் துவக்கவிழா உரை நிகழ்த்துவார். சாந்தி ராமச்சந்திரன் 'பெற்றோர்—ஆசிரியர் கழகத்தைத் துவக்கிவைப்பார். இடம்: 67, மௌபரீஸ் ரோட், சென்னை - 18. நேரம் மாலை 6 மணி.

# கோழிப்பண்ணை நடத்தும் அதிகாரம்கூட டில்லியிலா? நெடுஞ்செழியன் வேதனை

பெங்களூர், நவ. 28—கோழிப் பண்ணையையும் ஆட்டுப் பண்ணையையும் வைத்து நடத்தும் அதிகாரம்கூட டெல்லியிடம் இருந்துவருகிறதே என்று கல்வி அமைச்சர் நெடுஞ்செழியன் வேதனைப்பட்டார்.

பெங்களூரில் தி. மு. க. முப்பெரும் விழா சிவாஜி நகர் ஸ்டேடியத்தில் நடை பெற்றது. கூட்டத்திற்கு இளஞ்சேரன் தலைமை வகித்தார். கர்நாடகத்தின் முன்னாள் முதலமைச்சர் வீரேந்திரபாட்டீல் கூட்டத்தில் கலந்து கொண்டு பேசினார்.

நெடுஞ்செழியன் பேசுகையில் கூறியதாவது:—

அண்ணா நமக்குத் தந்த கொள்கைகளில் மிக முக்கியமான கொள்கை, மாநிலத்தில் சுயாட்சி, மத்தியில் கூட்டாட்சி என்ற கொள்கையாகும். இதனை ஓரளவுக்கு நீங்கள் நன்குபுரிந்துகொள்ள வேண்டும்.

இந்த நாடு விடுதலை பெற்று 27 ஆண்டுகளுக்கு மேலாகின்றது. நமக்கு பிறகு விடுதலைப் பெற்ற சுண்டைக்காய் நாடுகள் எல்லாம் வாழ்க்கைத் தரத்தில் இன்றைக்கு உயர்ந்து விளங்குகின்றன நீங்கள் நன்கு காணலாம். 27 ஆண்டுகளாகியும் இன்னும் வறுமைப்பிணியை இங்கு ஒழிக்கமுடியவில்லை. வேலையில்லாத் திண்டாட்டத்தைப் போக்க முடியவில்லை. இந்த நாட்டில் பொருளாதார வல்லுநர்கள் அறிவியல் அறிஞர்கள் இல்லையா என்று கேட்டால், இல்லையென்று யாரும் சொல்லிவிட முடியாது. இருந்தும், இந்த நாடு வாழ முடியாமல் தத்தளித்துக் கொண்டிருப்பதற்கு என்ன காரணம் என்பதை நீங்கள் உணரவேண்டும்.

## கட்டப்பட்ட கைகள்

அறிவுடைய மாநிலம் அறிவைச் செலவழிக்க முடியாமல்— திறமைக்கு இடமே இல்லாமல்— தங்கள் தங்கள் மாநிலத்தை அவரவர்களே உணர்ச்சிப் பெருக்கோடு காப்பாற்றிக்கொள்ள முடியாமல் இன்றைக்கு கைகளை கட்டப்பட்டிருக்கின்றன.

இன்றைக்கு தமிழ்நாட்டில் அறிவாளிகள் உண்டு. மாநில சுயாட்சி கிடைத்தால், நம்முடைய அறிவும் வேலை செய்யும் ஆற்றலும் வேலை செய்யும். அதுபோல கர்நாடகத்தில் இருப்பவர்களுடைய அறிவும் வேலை செய்யும், ஆற்றலும் வேலை செய்யும். இன்றைக்கு டில்லியில் எடுக்கிற எந்த முடிவும் அது 58 கோடி மக்களைக் கட்டுப்பட வேண்டியிருக்கிறது. நாங்கள் எந்தத் திட்டம் போட்டாலும், அவர்கள் தயவு இருந்தால்தான் அதை நிறைவேற்ற முடியும்.

## பிரிவினை அல்ல

மாநில சுயாட்சி வேண்டும் என்று கேட்டால், பிரிவினையைக் கேட்கிறார்கள் — தனிநாடு கேட்கிறார்கள் என்கிறார்கள். நாங்கள் தனிநாடோ - பிரிவினையோ — கேட்கவில்லை. 'ஸ்டேட் அட்டானமியைத் தான் கேட்கிறோம். என்று பலதடவை சொல்லிவிட்டோம். சமுதாய வளர்ச்சிப் பணியைக்கவனிக்க கர்நாடகத்தில் உள்ள கர்நாடக அரசு பார்த்துக் கொள்ளட்டும். அதுபோல தமிழ்நாட்டில் தமிழக அரசு பார்த்துக் கொள்ளட்டும் என்கிறோம்.

## கோழிப்பண்ணை அதிகாரம்

1947லிருந்து 1962 வரை நமக்குச் சொந்தமான 12500 சதுரமைல் பரப்பளவு உள்ள நிலத்தை சீனா பிடித்து வைத்துக் கொண்டு இருக்கிறது. அதை மீட்பதில் டெல்லி கவனம் செலுத்த வேண்டுமே யொழிய, ஆட்டுப் பண்ணையையும்-கோழிப் பண்ணையையும் நடத்துகிற அதிகாரம் டில்லியிடத்தில் எதற்கு இருக்க வேண்டும் என்று கேட்கிறோம்.

மக்களோடு நெருங்கிய தொடர்புள்ள அரசு, மாநில அரசே தவிர மத்திய அரசு கிடையாது.

கூட்டாட்சி அமைப்புக் கொண்ட நாடு வாழுமா என்று கேட்டால், வாழும். அதற்கு உதாரணம் அமெரிக்காவும் ரஷியாவும் ஆகும். அமெரிக்காவில் 54 மாநிலங்கள் இருக்கின்றன. ஒவ்வொரு மாநிலத்திற்கும் தனித்தனி கொடி உண்டு. இன்றைக்கு அமெரிக்காவில் எந்த மாநில அரசையும் வீட்டுக்கு அனுப்ப முடியாது. ஆனால் இங்கு விரும்பினால் அனுப்பலாம்.

## வலிவு ஏறுகிறது

மாநில சுயாட்சி என்ற கருத்துக்கு அங்குலத்திற்கு அங்குலம் வலிவு ஏறிக் கொண்டே வருகின்றது. இன்றைக்குச் சிலர் எங்களுடைய கருத்தைக் கேலி செய்யலாம். கேலி எங்களை ஒன்றும் செய்யாது. மாநில சுயாட்சி கிடைத்தால் தமிழகமாகட்டும், கருநாடக மாநிலமாகட்டும், ஆசியாவில் எப்படி ஜப்பான் எடுத்துக்காட்டாகத் திகழ்கிறதோ, அப்படி இந்தியாவில் தமிழ்நாடும், கருநாடக மாநிலமும் எடுத்துக்காட்டாகத் திகழும் என்பதில் ஐயமில்லை.

மேற்கண்டவாறு நெடுஞ்செழியன் பேசினார்.

## தமிழகத்தில் நிலையான ஆட்சி: வீரேந்திரபாட்டீல் பெருமிதம்

இந்தியாவிலேயே நிலையான ஆட்சி நடக்கும் மாநிலம் தமிழகமே என்றுகர்நாடக மாநில முன்னாள் முதலமைச்சர் வீரேந்திரபாட்டீல் கூறினார். முப்பெரும் விழாவில் கலந்து கொண்டு பேசுகையில் பாட்டீல் கூறியதாவது:—

பல கூட்டங்களில் நான் பேசியிருக்கிறேன். ஆனால் இவ்வளவு பெரிய கூட்டங்களில் நான் பேசியது இலையாது.

இந்தியாவில் காங்கிரஸ் அல்லாத கட்சி ஆட்சிசெலுத்துகிற மாநிலம் ஒன்று உண்டு என்று சொன்னால், அது தி மு கழகமாகத்தான் இருக்கமுடியும். பதினெட்டாவது ஆண்டில் ஆட்சியைக் கைப்பற்றி இருக்கிறது. 1971ல் எப்படி இந்திரா காந்திக்கு தேர்தல் சூறவளி சுழன்று வீசிற்றோ அதுபோல 1967ல் தி மு. க. வுக்கு வீசிற்று பல மாநிலங்களில் காங்கிரசுக்கு விரோதமானகட்சிகள் ஆட்சிக்குவந்தன. ஆனால் ஒன்றுகூட ஒன்று அல்லது ஒன்றரை ஆண்டுகளுக்கு மேல் நின்று நிலைபெறவில்லை. தமிழகத்தில் தான் 1967 லிருந்து தொடர்ந்து ஆண்டு கொண்டு வருகிறார்கள்.

அண்ணா மறைந்ததற்கு பிறகு இந்தக் கழகத்தைக் கருணாநிதி கட்டிக் காத்துக் கொண்டு வருகின்றார். குடிசை மாற்று வாரியத்தின் மூலம் ஆற்றிவரும் பணிகளைக் குறித்து மத்திய அரசே பாராட்டி வருகிறது.

இவ்வாறு அவர் பேசினார்.

முதலமைச்சர் கருணாநிதியை அவரது வீட்டில் ரஷ்யத் தூதுவர் விக்டர் எப். மால்ட்சேவ் சந்தித்துப் பேசினார்.

# 'ஜெய்சங்கருக்கு நல்ல எதிர்காலம் இருக்கிறது': ராசாராம் பாராட்டு

சேலம், நவ. 28—'பல படங்களில் நடித்து மக்கள் ஆதரவைப் பெற்றுள்ள ஜெய்சங்கருக்கு நல்ல எதிர்காலம் இருக்கிறது' என்று அமைச்சர் ராசாராம் பாராட்டினார்.

நடிகர் ஜெய்சங்கர் 100 சினிமா படங்களில் நடித்ததை யொட்டி அவருக்கு நண்பர்கள் குழு சார்பில் சேலம் நேரு கலையரங்கில் பாராட்டு விழா நடந்தது.

விழாவுக்கு அமைச்சர் ராசாராம் தலைமை தாங்கி, தங்கமுலாம் பூசிய உலக (குலோப்) உருண்டையை ஜெய்சங்கருக்கு பரிசாக வழங்கினார்.

அமைச்சர் ராசாராம் பேசும்போது கூறியதாவது:-

''இந்த விழா மூலம் வசூலாகும் தொகையை உடல் ஊனமுற்றோர் நல்வாழ்வு நிதிக்கு அளிக்கப் போவதாக ஜெய்சங்கர் கூறியுள்ளார். இதுபோன்ற உதவிகளை அவர் செய்வது, பாராட்டத்தக்கது.

பல படங்களில் ஜெய்சங்கர் சிறப்பாக நடித்திருக்கிறார். ஜேம்ஸ்பாண்டாக நடித்தும் புகழ்பெற்றிருக்கிறார். அவருக்கு நல்ல எதிர்காலம் இருக்கிறது.

மேற்கண்டவாறு அமைச்சர் ராசாராம் கூறினார்.

## ஜெயசித்ரா சூட்டிய மலர்க் கிரீடம்

நடிகை ஜெயசித்ரா ஜெய்சங்கருக்கு மலர்க்கிரீடம் அணிவித்து பாராட்டி பேசினார். மற்றும் நடிகர்கள் அசோகன் கே. ஏ. தங்கவேலு, வி. கே. ராமசாமி, தேங்காய் சீனிவாசன், பக்கோடா காதர், நடிகைகள் நிர்மலா, ஸ்ரீபிரியா, டைரக்டர்கள் கிருஷ்ணமூர்த்தி, பிரகாசம், எஸ். பி. முத்துராமன் ஆகியோர் விழாவில் கலந்து கொண்டு பேசினார்கள்.

சேலம் மாவட்ட கலெக்டர் சுவாமிநாதனும் விழாவில் கலந்து கொண்டு பேசினார்.

## ரூ. 18 ஆயிரம் நன்கொடை

பாராட்டு விழாவை யொட்டி வெளியிடப்பட்ட மலரை பி. எல். பழனியப்ப செட்டியார் வெளியிட்டு, சென்னை ''மெர்சிஹோம்'' இல்லத்துக்கு ரூ. 1,000 நன்கொடை வழங்கினார்.

ஜெய்சங்கர் ரசிகர்கள் மன்றம் சார்பில் ரூ. 2,000 நன்கொடை வழங்கப்பட்டது. பாராட்டு விழா நிகழ்ச்சி மூலம் ரூ. 15 ஆயிரம் வசூலாகியது. இந்த பணமும் ''மெர்சிஹோம்'' இல்லத்துக்கு வழங்கப்படும்.

பாராட்டுகளுக்கு ஜெய்சங்கர் நன்றிதெரிவித்துபேசினார்.

# கள்ளச்சாராயத்தை தடுக்க புதிய முறை: கிராம மக்கள் ஏற்பாடு

பட்டுக்கோட்டை. நவ. 28—கள்ளச்சாராயம் காய்ச்சுபவர்களையும், குடிப்பவர்களையும் கிராம மக்களே பிடித்து தண்டனை கொடுக்க ஏற்பாடு செய்யப்பட்டது.

இதன்படி 50-க்கு மேற்பட்ட கிராமங்களில் கள்ளச்சாராயம் காய்ச்சுவது ஒழிக்கப்பட்டது.

அண்மையில் சென்னையில் நடைபெற்ற உயர்மட்ட போலீஸ் அதிகாரிகளின் மாநாட்டில் கள்ளச்சாராயம் காய்ச்சுவோரை தடுக்க தீவிர நடவடிக்கைகள் எடுப்பது என்று தீர்மானிக்கப்பட்டது.

அதன் பேரில் பட்டுக்கோட்டை போலீஸ் டிப்டி சூப்பிரண்டு ஏ. எம். அபிபுல்லா பட்டுக்கோட்டை, ஒரத்தநாடு பகுதிகளில் புதிய முறையை மேற்கொண்டுள்ளார்.

கள்ளச்சாராயம் காய்ச்சுபவர்களையும், வைத்திருப்பவர்களையும், குடிபோதையில் இருப்பவர்களையும் பிடித்துச் சென்று அந்தந்த கிராம மக்களின் முன்னிலையில் குற்றவாளிகளை நிறுத்தி அவர்கள் செய்த குற்றத்தை மக்கள் முன்னிலையில் ஒப்புக்கொள்ளச் செய்து சாராயம் காய்ச்சுபவருக்கு 100 ரூபாயும், குடிப்பவருக்கு 50 ரூபாயும், சாராயம் வைத்திருப்பவருக்கு 25 ரூபாயும் அபராதம் விதிப்பது என்றும் அதை மீறி மேலும் யாராவது இந்தக் குற்றத்தைச் செய்தால் அவர்களைப் பிடித்து போலீசில் ஒப்படைப்பது என்றும் முடிவு செய்யப்பட்டது.

அழகிகள் கைது

## 12 பேருக்கு அபராதம்; 2 பேருக்கு சிறை

காரைக்கால், நவ. 28—காரைக்காலில் விபச்சாரத் தடுப்பு சட்டத்தின்கீழ் 14 அழகிகள் கைது செய்யப்பட்டார்கள்

சாந்தகுமாரி (வயது 25) லட்சுமி (வயது 22) ஜெயா (வயது 21) ஆர். சரோஜா (வயது 23) வி. சரோஜா (வயது 23) ராதா (வயது24) சீதா (வயது 25) ஜோதி (வயது 25) சந்திரா (வயது 30) செல்வி (வயது 25) சுசீலா (வயது 22) சரசு (வயது 28) சந்திரா (வயது 30) ஜெமீலாபீவி வயது 30) ஆகிய 14 பேர்களையும் காரை போலீஸ் சப்இன்ஸ்பெக்டர் முத்தையன் கைதுசெய்து இவர்கள் மீது வழக்கு பதிவு செய்தார்.

இந்த வழக்கை நீதிபதி பி. ஏ. சுப்பிரமணியம் விசாரணை செய்து 12 பேருக்கு தலா 150 ரூபாய் அபராதமும், சந்திரா, ஜெமீலாபீவி ஆகிய இரண்டு அழகிகளுக்கும் 6 வாரம் ஜெயில் தண்டனை விதித்து தீர்ப்பு கூறினார்.

## ஸ்கூட்டர் கவிழ்ந்து இளைஞர் மரணம்

சென்னை, நவ. 28—சென்னையிலிருந்து இரு இளைஞர்கள் ஏறிச்சென்ற ஒரு ஸ்கூட்டர் பட்டாபிராம் அருகே கவிழ்ந்தது. இந்த விபத்தில் அந்த இளைஞர்களில் ஒருவர் மரணமடைந்தார்.

பட்டாபிராம் அருகே நெமிலிச்சேரி என்னுமிடத்தில் இந்த விபத்து நடந்தது. இரு இளைஞர்களும் படுகாயமடைந்தனர். 2 பேரும் ஜெனரல் ஆஸ்பத்திரியில் அனுமதிக்கப்பட்டனர். அவர்களில் ஒருவர் இறந்தார். மற்றொருவர் நிலைமை கவலைக்கிடமாக உள்ளது.

## நியூயார்க் பருத்திமார்க்கெட்

நியூயார்க், நவ. 27—

| | |
|---|---|
| ஆரம்ப விலை | 41·50 |
| முடிவு விலை | வரவில்லை |

சென்னையில் நடைபெற்ற தீவிர குடும்ப கட்டுப்பாட்டு விழாவில் சுகாதார அமைச்சர் அன்பழகன் பேசினார்.

ஓடும் ரெயிலில் நடந்தது

# கத்தியால் குத்தவந்த திருடனை விரட்டிய வீரப் பெண்மணி

மதுரை; நவ. 28—ஓடும் ரெயிலில் கத்தியைக் காட்டி மிரட்டிய திருடனை பெண்மணி ஒருவர் வீரத்துடன் விரட்டினார். தன்னைப் பிடிக்க முயன்ற அந்தப் பெண்ணின் கணவரைக் கத்தியால் குத்திவிட்டு திருடன் ஓடிவிட்டான்.

இந்தச் சம்பவம் பற்றிய விவரமாவது:—

மதுரை குயவர் பாளையத்தைச்சேர்ந்தவர் புன்னமுத்து. அவருடைய மனைவி குருவம்மாள். இவர்கள் இருவரும் கோழி வியாபாரம் செய்பவர்கள்.

கோழி வியாபாரத்தை முடித்துக்கொண்டு இருவரும் விருதுநகரில் இருந்து மதுரைக்கு ரயிலில் வந்து கொண்டு இருந்தார்கள்.

அந்த ரெயில், திருமங்கலம் அருகே வந்தபோது, அவர்கள் இருந்த பெட்டிக்குள் ஒரு வாலிபர் நுழைந்தார். 2 கைகளிலும் கத்தி வைத்திருந்தார்.

''கையில் வைத்திருக்கும் பணத்தை எடுங்கள'' என்று கத்தியைக் காட்டி அவர்களை மிரட்டினார்.

## திருடனை விரட்டிய தம்பதிகள்

குருவம்மாள், அந்த வாலிபரின் கைகளில் இருந்த கத்திகளைப் பிடுங்க முயன்றாள். புன்னமுத்து, அந்த வாலிபரைப் பிடிக்க தாவினார்.

இருவருடைய பிடியில்இருந்தும் தப்பிய அந்த வாலிபர், புன்னமுத்துவைக் கத்தியால் குத்திவிட்டு, ரெயிலில் இருந்து குதித்து தப்பி ஓடிவிட்டார். புன்னமுத்துவுக்கு நெஞ்சில் காயம் ஏற்பட்டு உள்ளது.

இது பற்றி, மதுரை ரெயில் நிலைய போலீசார் விசாரணை நடத்தி வருகிறார்கள்.

## பூச்சி மருந்து கடத்தல்

சென்னை, நவ. 28—சென்னை ஜெனரல் ஆஸ்பத்திரியிலிருந்து 7 லிட்டர் பூச்சி மருந்தைக் கடத்திச் சென்றதாக பார்த்தசாரதி என்பவரை போலீஸ் சப் இன்ஸ்பெக்டர் ராமமூர்த்தி கைது செய்தார்.

பார்த்தசாரதி மீது போடப்பட்ட வழக்கில் அவருக்கு ரூ. 5 அபராதம் விதிக்கப்பட்டது.

# பயங்கர பஸ் விபத்து: 'செத்தவர்' பிழைத்துப் பேசிய அதிசயம்

மதுரை, நவ. 28—கொடைக்கானல் மலையிலிருந்து 'இடு இடு' பள்ளத்தில் பஸ் உருண்டு 24 பேர் செத்தார்கள் அல்லவா? இதில் செத்ததாகக் கருதப்பட்ட ஒருவர் பிழைத்துக் கொண்டார்.

''ஏன் அழுகிறீர்கள்? நான் சாகவில்லை'' என்று அவர் கூறியதும், கூடியிருந்த உறவினர்கள் வியப்பில் ஆழ்ந்தனர்.

இது பற்றி விவரம் வருமாறு:—

மதுரையில் இருந்து கொடைக்கானலுக்குப் போய்க்கொண்டிருந்த அந்த தனியார் பஸ், தம்பட்டம் பாறை என்ற இடத்தில் பாதையை விட்டு விலகி, 200 அடி பள்ளத்தில் விழுந்து நொறுங்கியது. செவ்வாய்க்கிழமை பிற்பகல் இந்த விபத்து நடந்தது.

பஸ் சுக்கல் சுக்கலாக நொறுங்கியது. பஸ்சில் இருந்த பிரயாணிகள் மலைச் சரிவில் உருண்டும், பஸ்சுக்குள் சிக்கி நசுங்கியும் படுகாயம் அடைந்தனர்.

இந்த விபத்தில் முதலில் 14 பேர் செத்ததாகவும், 35 பேர் காயம்அடைந்ததாகவும் அறிவிக்கப்பட்டது.

நேற்று விபத்து நடந்த இடத்தில் மேலும் சில உடல்கள் கண்டு பிடிக்கப்பட்டன. ஆஸ்பத்திரியில் சேர்க்கப்பட்டவர்களில் 2பேர் இறந்து போனார்கள். எனவே சாவு எண்ணிக்கை 24 ஆகஉயர்ந்து உள்ளது.

## அடையாளம் தெரிந்த உடல்கள்

செத்தவர்களில் பலரது உடல்கள் அடையாளம் கண்டுபிடிக்க முடியாத அளவுக்கு உருக்குலைந்துவிட்டன. கீழ்க்கண்ட 11 பேர்களின் உடல்கள் அடையாளம் கண்டுபிடிக்கப்பட்டுள்ளன:—

1. தங்கவேலு செட்டியார் (வயது 50) பூலந்தூர் பஞ்சாயத்து தலைவர்.
2. சுப்பையா செட்டியார்
3. விஜயா (வயது 30) சுப்பையா செட்டியாரின் மகள்.
4. விசாலம் அம்மாள்.
5. கே. எஸ். பி. ராஜு காண்டிராக்டர்.
6. பார்வதி அம்மாள் (வயது 57)
7. சண்முகம் பார்வதி அம்மாளின் மகன்.
8. குமரேசன்
9. லெட்சுமி அம்மாள்
10. மாரிமுத்து. பஸ் டிரைவர்
11. சுப்புத்தாய்

## விபத்து நடந்தது எப்படி

இந்த விபத்தில், பஸ் கண்டக்டர் ராமச்சந்திரன் காயம் அடைந்து, வத்தலக்குண்டு ஆஸ்பத்திரியில சேர்க்கப்பட்டு இருக்கிறார். விபத்து நடந்தது பற்றி அவர் கூறியதாவது:—

''எங்கள் பஸ், வத்தலக்குண்டில் இருந்து பகல் 12 மணிக்கு புறப்பட்டு மலையில் போய்க் கொண்டிருந்தது. தம்பட்டம் பாறை அருகே போனபோது எதிர்பாராதவிதமாக ஒரு கல் மீது மோதியது. அதனால் பஸ் கட்டுக்கு அடங்காமல் ஓடி, தடுப்பு சுவரை இடித்துக் கொண்டு பள்ளத்தில் உருண்டது.

உடனே நான் உயிர் தப்புவதற்காகபஸ்சில்இருந்து குதித்துவிட்டேன். 20 அடி ஆழத்தில் உள்ள புல்தரையில் விழுந்தேன். மயக்கமாக இருந்தது. அதன்பின் என்ன நடந்தது என்பது தெரியாது.

மீட்பு வேலையில் ஈடுபட்ட ஒருவருடைய உதவியால், வத்தலகுண்டு வந்தேன். போலீசில் விபத்து பற்றி புகார் செய்தேன்.''

மேற்கண்டவாறு கண்டக்டர் கூறினார்.

## செத்தவர் பிழைத்த அதிசயம்

இந்த விபத்தில் உயிர்தப்பியவர்களில் சேது செட்டியார் என்பவரும் ஒருவர் அவர் பள்ளத்தில் தூக்கி எறியப்பட்டுக் கிடந்தார். அவர் செத்துவிட்டார் என்று மேலே தூக்கி வந்தார்கள்.

உறவினர்கள் — நண்பர்கள் அவரது உடலைப் பார்த்து கதறி அழுதார்கள். திடீர் என்று சேது செட்டியார் கண்ணை திறந்து பார்த்தார். 'ஏன் அழுகிறீர்கள். நான் சாகவில்லை'' என்று கேட்டு எல்லோரையும் வியப்பில் ஆழ்த்தினார்.

## நாய் நரிகள்

பஸ் விபத்து நடந்த இடத்தில், அன்று இரவு முழுவதும் பிணவாடை வீசியது.

நாய்களும், நரிகளும் படை எடுத்து வந்துவிட்டன. மீட்பு வேலையில் ஈடுபட்டவர் தீப்பந்தங்களைக் கொளுத்திக் காட்டி அவற்றை விரட்டி அடித்தார்கள்.

# பார்லிமெண்ட் முன்பாக ஆர்ப்பாட்டம்: கல்லூரி ஆசிரியர் திட்டம்

சென்னை, நவ. 28—தங்களுடைய கோரிக்கைகளை வற்புறுத்தி நாடு பூராவிலும் உள்ள பல்கலைக் கழக, கல்லூரி ஆசிரியர்கள் அடுத்த மாதம் 2-ந் தேதி பார்லிமெண்ட் முன்பாக ஆர்ப்பாட்டம் நடத்துவர்.

பல்கலைக் கழக, கல்லூரி ஆசிரியர் அமைப்புகளின் அகில இந்திய பெடரேஷன் சென்னையில் கூடி இவ்வாறு முடிவு எடுத்துள்ளது.

இந்த ஆர்ப்பாட்டத்தில் 10 ஆயிரம்பேர் பங்கு கொள்வர் என்று எதிர்பார்ப்பதாக இப் பெடரேஷனின் பொதுச் செயலாளரான பேராசிரியர் அமியாதாஸ் குப்தா கூறினார்.

வேலைப் பாதுகாப்புவேண்டும், மானியக் கமிஷன் சிபாரிசுப்படி சம்பளம் அளிக்கப்படவேண்டும்; பல்கலைக்கழக கல்லூரி நிர்வாகத்தில் ஜனநாயக முறை ஏற்படுத்தப்பட வேண்டுமென்பன அவர்களுடைய முக்கிய கோரிக்கைகளாகும்.

சைதாப்பேட்டையில்

# காமராஜ் சிலை: சிவாஜி திறக்கிறார்

சென்னை, நவ. 28—சைதாப்பேட்டையில் பழைய காங்கிரஸ் தலைவர் காமராஜர் சிலையை சிவாஜிகணேசன் ஜனவரி மாதம் திறநதுவைக்கிறார்.

இதற்கான ஏற்பாடுகளை சென்னை மாவட்ட சிவாஜி ரசிகர் மன்றத்தினரும், சைதை சிவந்தமண் சிவாஜி கணேசன் ரசிகர் மன்றத்தினரும் செய்துவருகின்றனர்.

## செம்பு உற்பத்தி ஆரம்பம்

கல்கத்தா, நவ. 28—இந்துஸ்தான் செம்பு நிறுவனம் கேத்ரி என்னுமிடத்தில் அமைத்துள்ள செம்புத் தொழிற்சாலையில் கடந்த 19ந் தேதியிலிருந்து செம்பு உற்பத்தி துவங்கிவிட்டதாக அறிவிக்கப்பட்டுள்ளது.

இதற்கிடையே காட்சிலா என்னுமிடத்தில் அக்டோபரில் 76 ஆயிரம் மெட்ரிக் டன் செம்புக் கனி வெட்டி எடுக்கப்பட்டு புதிய சாதனை ஏற்படுத்தப்பட்டுள்ளது.

கூட்டுறவு பாங்கு ஊழியர்கள், தங்கள் கோரிக்கைகளை வற்புறுத்தி சென்னையில் உண்ணாவிரதம் இருந்தனர்.

காதலன் மனைவி வழக்கு:

# உலக அழகிக்கு வக்கீல் 'நோட்டீஸ்'

லண்டன், நவ. 28— உலக அழகி ஹெலன்மீது, அவளுடைய காதலனின் மனைவி வழக்குத் தொடருகிறார்.

இதனால், தனக்கு உலக அழகிப்பட்டம் வேண்டாம் என்று அழகி ஹெலன் கூறினார்.

இதுபற்றிய விவரம் வருமாறு:—

இங்கிலாந்து நாட்டின் தலைநகரான லண்டனில் 5 நாட்களுக்கு முன்பு உலக அழகிப் போட்டி நடந்தது.

57 நாடுகளைச் சேர்ந்த அழகிகள் கலந்து கொண்ட அந்த போட்டியில் இங்கிலாந்தைச் சேர்ந்த ஹெலன் (22) உலக அழகியாக தேர்ந்தெடுக்கப்பட்டார்.

### ரூ. 12 லட்சம் பரிசை இழக்கிறார்

உலக அழகி பட்டம் பெற்ற 5 நாட்களிலேயே அந்த பட்டம் தனக்கு வேண்டாம் என்று ஹெலன் அறிவித்துள்ளார். இதனால் ஹெலனுக்கு கிடைப்பதாக இருந்த ரூ. 12 லட்சம் பரிசுப்பணம் கிடைக்காது.

அழகிப் போட்டியை நடத்தியவர்கள் ஹெலனின் முடிவை ஏற்றுக்கொண்டார்கள். இப்போது மற்றொரு அழகிபோட்டி நடத்தலாமா என்று யோசித்து வருகிறார்கள்.

அழகி ஹெலனுக்கு திருமணம் ஆகவில்லை. ஆனால் 1½ வயதில் ஒரு ஆண் குழந்தை இருக்கிறது. தன்னுடைய காதலனின்மூலம் இந்த குழந்தை பிறந்ததாக ஹெலன் கூறினார்.

அந்த காதலன் ஏற்கனவே திருமணம் ஆனவன். அவனுடைய மனைவிபெயர் லிண்டா. இரவு விடுதியில் கவர்ச்சி நடனம் ஆடும் பெண்.

### வழக்கு

இப்போது அழகி ஹெலன் மீது வழக்கு தொடரப்போவதாக லிண்டா அறிவித்துள்ளார். என்னுடைய திருமண வாழ்க்கை சிதைந்து போனதற்கு ஹெலன் தான் காரணம் ஆகவே அவள் மீது வழக்கு தொடருவேன் என்று வக்கீல மூலம் லிண்டா அறிவித்துள்ளார்.

இதையொட்டி உலக அழகி பட்டம் தனக்கு வேண்டாம் என்று ஹெலன் அறிவித்துள்ளார்.

7-ம் பத்தி தொடர்ச்சி

அவசியம் என்று சென்ற ஆண்டிலேயே நான் முடிவு செய்துவிட்டேன்.

எந்த அரசியல் கட்சிக்கும் தலைமை தாங்க நான் விரும்பவில்லை. காங்கிரஸ் கட்சிக்கு மாற்றாக ஒரு கட்சியை அமைக்க வேண்டும் என்று எதிர்க்கட்சிகள் விரும்பினால் அவை அந்த முயற்சியில் இறங்கட்டும்" என்றார் ஜெயப்பிரகாஷ்.

## ஜெயப்பிரகாஷ் ஊர்வலம் மீது கல் வீச்சு: காருக்கு சேதம்

ஜெயப்பிரகாஷ் நாராயணன் நேற்று டெல்லியிலிருந்து குருஷேத்திரத்திற்குக் காரில் சென்றபோது வழியில் கார்னல் நகரில் இரண்டு இடங்களில் கற்கள் வீசப்பட்டன.

ஜெயப்பிரகாஷ் கோஷ்டியினர், 5 கார்களில் சென்றார்கள். அந்தக் கார்களில் 3 கார்கள் மீது தடியடி நடந்தது.

அந்தக் கார்களில் இருந்த ஒரு பத்திரிகையின் புகைப்பட நிபுணருக்கு தலையில் தடியடி விழுந்து அவருக்கு பலத்த காயம் ஏற்பட்டது.

ஒரு காரிலிருந்து கொடி பிடுங்கி எறியப்பட்டது.

ஜெயப்பிரகாஷ் நாராயணனுடன் சென்ற மதுலிமாயி எம். பி. இந்த தகவலை வெளியிட்டார்.

## டெல்லியில் சூடான் ஜனதிபதி

புதுடெல்லி, நவ. 28—சூடான் என்ற ஆப்ரிக்க நாட்டின் ஜனதிபதி நுமேரி நேற்று விமானம் மூலம் புதுடெல்லி வந்து சேர்ந்தபோது அவருக்கு விமான நிலையத்தில் உற்சாக வரவேற்பு கொடுக்கப்பட்டது.

ஜனதிபதி பக்ருதீன் அலி அகமது, பிரதமர் இந்திரா, மத்திய மந்திரிகள், வெளிநாட்டு தூதர்கள், உயர்தர அதிகாரிகள் முதலானோர் விமான நிலையத்தில் அவரை வரவேற்றார்கள்.

இந்தியாவில் அவர் 6 நாட்கள் சுற்றுப்பிரயாணம் செய்வார்.



# ஏழைப் பெண்ணுக்கு திருமணம்: எண்ணூறு சிறுவர் நடத்துகிறார்கள்

சென்னை, நவ. 28—ஏழைப் பெண் ஒருத்திக்கு 800 சிறுவர்கள் சேர்ந்து திருமணம் செய்து வைக்கப் போகிறார்கள்.

இந்த அதிசய திருமணம் டிசம்பர் முதல்தேதி சென்னையில் நடக்க இருக்கிறது.

சென்னை மோபரீஸ் சாலையில் உள்ள பாஸ்டன் ஹயர் செகண்டரி பள்ளி மாணவர்களும் அதன் ஸ்தாபகர் வி. சாவித்திரியும் இந்த அதிசய திருமணத்தை நடத்திவைக்கிறார்கள்.

பாஸ்டன் கல்வி அறக்கட்டளையும், பாஸ்டன் மாதர் சங்கத்தினரும் இம் மாதம் 29-ம் தேதி அதன் ஸ்தாபகர் தினத்தைக்கொண்டாடுகிறார்கள்.

இந்த விழாவில் போக்குவரத்து அமைச்சர் ராமச்சந்திரனும் அவரது மனைவி சாந்தியும் கலந்து கொள்கிறார்கள்.

இந்த விழா விவரங்களை நேற்று வி. சாவித்திரி அம்மாள் நிருபர்களிடம் விளக்கினார்.

அவர் கூறியதாவது:—

### 60லிருந்து 800

5 ஆண்டுகளுக்கு முன்பு 60 சிறுவ சிறுமிகளைக் கொண்ட பள்ளியாக இது துவங்கி இன்று 800 மாணவர்கள்படிக்கும் நிலையமாக மாறி இருக்கிறது.

போதிய கட்டிட வசதி இல்லாமையால் புதிதாக வரும் மாணவர்களை திருப்பி அனுப்ப வேண்டிய நிலை இருக்கிறது.

தரமான கல்வியும், கண்டிப்பும்தான் முக்கிய குறிக்கோளாக கொண்டு செயல்பட்டு வருகிறோம்.

கல்வி நிலையத்தில் வரும் வருவாயில் ஒரு பகுதியை தரும காரியங்களுக்கும் பயன்படுத்துகிறோம்.

தீபாவளி, பொங்கல் போன்ற பண்டிகை நாட்களில் சேரிப்பகுதிகளுக்குச் சென்று புத்தாடை கொடுக்கிறோம். இனிப்புக்கள் கொடுத்து வருகிறோம்.

ஏழைகளுக்கு திருமணம் செய்து வைக்கிறோம். கடந்த ஆண்டில் இரண்டு திருமணங்களை செய்து வைத்திருக்கிறோம். இதற்கு மட்டும் 2500 ரூபாய் செலவிட்டு இருக்கிறோம்.

இந்த திருமணங்களில் அமைச்சர் சாதிக்பாட்சா கலந்துகொண்டு பாராட்டி இருக்கிறார். ஏழைகள் திருமணத்திற்காக உதவி கோரினால் திருமாங்கல்யமும், கூறைப் புடவையும வாங்கிக் கொடுப்பது என்று முடிவு எடுத்துள்ளோம்.

அதன்படி 10-ம் தேதி அலமேலு என்ற ஒரு பெண்ணுக்கு வழங்க செயற்குழு கூட்டம் முடிவு எடுத்தது.

### இரவில் வந்த ஏழைப் பெண்

இரண்டு நாட்களுக்கு முன்பு இரவு 10 மணிக்கு என் வீட்டுக் கதவு தட்டப்பட்டது. திறந்து பார்த்தேன். சோகமே உருவாக ஒரு பெண்ணும், அவர் தந்தையும் நின்று இருந்தனர். விஷயம் என்ன என்று கேட்டேன்.

அவர்கள் சொன்ன விவரம் மனதை உருக்குவதாக இருந்தது. வந்தவர்கள், கிண்டியில் உள்ள டான்சி அச்சகத்தில் பணிபுரியும் ராமசாமி

2-ம் பக்கம் பார்க்க

Printed by S. V. G. Sowrirajulu at the M. C. P.P.S. Press, No. 4, South Bank Road, Madras-28, and Published by him for the Madras Co-operative Printing and Publishing Society Ltd.

Chief Editor: S. V. G. Sowrirajulu.

Honorary Editor: N. Muthu kumarasami.

(6-ம் பத்தி தொடர்ச்சி)

துறை மந்திரியாக இருப்பவர் மாறலாம், எனவே உரிமைப் பிரச்னை உள்துறை மந்திரிமீது தான் இருக்கமுடியும் அந்த முறையில் இடபோதைய உள்துறை மந்திரி சம்பந்தப்பட்டுள்ளார் என்று பிரதமர் இந்திரா கூறினார்.

இச்சமயத்தில் மந்திரி ரகுராமய்யா எழுந்து எதிர்க்கட்சி வாதத்தை எதிர்க் கட்சிக்கு எதிராகத் திருப்பினார்.

"தனிப்பட்ட முறையில் உமாசங்கர் தீட்சித் மீது உரிமைப் பிரச்னை கொண்டுவரப்பட்டுள்ளதாக எதிர்க் கட்சியினர் கூறுகின்றனர். இப்போது அவர் உள்துறை மந்திரி அல்ல. அவரால் தனது உறுதிமொழியை நிறைவேற்ற இயலாது. புதிய உள்துறை மந்திரி அந்த உறுதி மொழியை அளிக்கவில்லை என்பதால் அவர்மீது உரிமைப் பிரச்னை கொண்டு வரமுடியாது' என்று மந்திரி ரகுராமய்யா வாதித்தார்.

அவர் இப்படி சொன்னதும் எதிர்க் கட்சியினர் கடும் ஆட்சேபம் தெரிவித்தனர்.

நேற்று எதிர்க்கட்சியினர் பாண்டிச்சேரி லைசென்ஸ் ஊழலில் சம்பந்தப்பட்டதுல் மோகன் ராம்மீதும் ஒரு உரிமைப் பிரச்னை கொண்டு வந்தனர்.

# 7000 மைல் நடந்த கிழவர்

மாஸ்கோ, நவ. 28—இருதய நோயிலிருந்து அப்போதுதான் குணமடைந்த 59 வயதுக் கிழவர் 7000 மைல் தூரம் நடந்துள்ளார்.

ரஷியாவைச் சேர்ந்த அக்கிழவரின் பெயர் ஜார்ஜி புஷ்[illegible]யவ் கடந்த ஜனவரியில் அவருக்கு இருதய நோய் ஏற்பட்டது. பிறகு அவர் நோயிலிருந்து சற்று குணமடைந்தார். நல்ல உடல் ஆரோக்கியத்தைப் பெற ரஷியாவின் மேற்குக் கோடியிலிருந்து கிழக்குக் கோடிவரை நடந்தே செல்வது என்று தீர்மானித்துக் கிளம்பினார். அவர் நடந்தார். நடந்தார் 7000 மைல் நடந்தார். நதிகளைக் கடந்தார், மலைகளைக் கடந்தார். இறுதியில் கடந்த சனிக்கிழமையன்று கிழக்குக்கோடியில் உள்ள விளாடிவாஸ்டாக் நகருக்குப் போய்ச் சேர்ந்தார்.

தனது நீண்ட நடைப் பயணத்தை முடிக்க அவருக்கு 7 மாதங்களும், 25 நாட்களும் பிடித்தன.

தனது பயணத்தின்போது அவர் கடுமையான பகுதிகளைக் கடக்க வேண்டியிருந்தது.

உதாரணமாக மத்திய சைபீரியாவில் அவர் சாதாரண கூடாரத்தில் தங்கித் தூங்கினார்.

இப்போது அவர் நல்ல ஆரோக்கியத்துடன் இருக்கிறார்.

ஜெயப்பிரகாஷ் தாக்கு

# "தேர்தல் வெற்றி: இந்திராவின் ஒரே நோக்கம்"

குருக்ஷேத்திரம், நவ. 28— "தேர்தலில் வெற்றி பெறுவதே இந்திராவின் ஒரே நோக்கம்" என்று சர்வோதயத் தலைவர் ஜெயப்பிரகாஷ் கூறினார்.

ஹரியானா மாநிலத்தில் குருஷேத்திரம் என்ற இடத் ஜெயப்பிரகாஷ் நாராயணன் நேற்று "மக்கள் இயக்கத்தை" ஆரம்பித்து வைத்தார்.

இது சம்பந்தமாக நடந்த மாபெரும் பொதுக் கூட்டத்தில் பேசுகையில், ஜெயப்பிரகாஷ் கூறியதாவது:—

"மகாபாரதப் போர் நடந்த இடமான குருஷேத்திரத்தில் இந்த இயக்கம் ஆரம்பித்து வைக்கப்படுவது ஒரு நல்ல சகுனமாகும். ஹரியானா மாநில மக்கள், முன் வைத்த காலை இனி பின் வைக்கக் கூடாது.

ஹரியானா மாநில முதலமைச்சர் பதவியிலிருந்து பன்சிலால் விலகும் வரை பிரதமர் பதவியிலிருந்து இந்திரா விலகும் வரை இந்தப் போராட்டம் ஓயக் கூடாது.

நாட்டில் ஜனநாயகத்தை நசுக்குவதில் பிரதமர் இந்திராவும், முதலமைச்சர் பன்சிலாலும் ஈடுபட்டிருக்கிறார்கள். இந்த விஷயத்தில் அவர்களுக்கிடையே வித்தியாசம் இல்லை.

அவர்கள் இ[illegible]நம் ஜனநாயகம் பற்றி அடிக்கடி உபதேசம் செய்கிறார்கள். ஜனநாயகத் தத்துவங்களை நான் தாக்குவதாக அவர்கள் புகார் கூறுகிறார்கள். கருத்துக்களை பரிவர்த்தனை செய்துகொள்வதற்குக் கூட மக்களைத் தடுக்கலாம் என்பதை ஜனநாயகம் பற்றிய எந்த புத்தகத்திலிருந்து அவர்கள் தெரிந்து கொண்டார்கள் என்பதை அறிய விரும்புகிறேன்.

வாக்குறுதிகளை நிறைவேற்றவும், லஞ்ச ஊழலை ஒழித்துக்கட்டவும் ஆளும் காங்கிரஸ் கட்சியினால் இயலாது என்பதை 27 ஆண்டுகளுக்குப் பிறகு இப்போது முதலாவது தடவையாக மக்கள் உணர்ந்து விட்டனர்.

### இந்திராவின் ஒரே நோக்கம்

நாட்டில் ஒழுக்க உணவு குறைந்துள்ளதே நாட்டின் முக்கிய பிரச்னைகளுக்கு காரணமாகும். தேர்தல்கள் சம்பந்தமாக ஆளும் கட்சி பின்பற்றுகிற கொள்கை இதை வெளிப்படுத்துகிறது.

இந்திராகாந்தியின் ஒரே நோக்கம், தேர்தலில் வெற்றி பெறுவதேயாகும் என்று தோன்றுகிறது. தேர்தலில் வெற்றி பெறுவதற்காக எந்த வழியையும் பின்பற்றலாம் என்று அவர் கருதுகிறார் போல் தோன்றுகிறது.

தேர்தலில் கள்ளப்பணம் முக்கிய பங்கு வகிக்கிறது. எதிர்க்கட்சிகள்கூட கள்ளப் பணத்தை பயன்படுத்துவதாக புகார் கூறப்படுகிறது. ஆனால் காங்கிரஸ் கட்சிக்குத்தான் கள்ளப்பணத்துல் பெரும் பகுதி கிடைக்கிறது.

தற்போதைய தேர்தல் முறை மாற்றப்பட வேண்டும். இந்த முறை மாற்றப்பட்டாலொழிய நாட்டில் தேர்தல் பாரபட்சமற்ற முறையில் நடைபெற இயலாது.

தேர்தல் முறையை மாற்றி அமைக்க வேண்டியதன் அவசியம் பற்றி சென்ற ஆண்டிலேயே பிரதமர் இந்திராவிடம் நான் நேரில் வற்புறுத்தினேன். தேர்தல் முறையை மாற்றுவதற்கு 'போராட்டம்

4-ம் பத்தி பார்க்க

மத்திய மந்திரிகள்மீது

# உரிமை பிரச்னை விவகாரத்தில் புதிய திருப்பம்

புதுடெல்லி, நவ. 28—பாண்டிச்சேரி லைசென்ஸ் ஊழல் சம்பந்தமாக மத்திய மந்திரிகள் 4 பேர்மீது கொண்டுவரப்பட்டுள்ள உரிமைப் பிரச்னை விவகாரத்தில் புதிய திருப்பம் ஏற்பட்டுள்ளது.

உரிமைப் பிரச்னைகளை விவாதத்துக்கு அனுமதிப்பதா என்பது பற்றி அடுத்த வாரம் தீர்ப்பளிப்பதாக மக்கள் சபை சபாநாயகர் நேற்று கூறினார்.

பாண்டிச்சேரி லைசென்ஸ் ஊழல் சம்பந்தமான சி.பி.ஐ. அறிக்கையைத் தாக்கல் செய்வதாக முன்னர் உள்துறை மந்திரியாக இருந்த உமா சங்கர் தீட்சித் உறுதி கூறினார். ஆனால் அந்த உறுதிமொழி மீறப்பட்டுள்ளது. இது உரிமையை மீறும் செயலாகும் என்று எதிர்க் கட்சியினர் புகார் கூறி முன்னாள் உள்துறை மந்திரி உமா சங்கர் தீட்சித் மீது உரிமைப் பிரச்னை கொண்டுவந்துள்ளனர்.

மத்திய மந்திரி சபையில் சமீபத்தில் மாறுதல் செய்யப்பட்டபோது உமாசங்கர் தீட்சித் இலாகா இல்லாத மந்திரியாக்கப்பட்டு, பிரும்மானந்த ரெட்டி உள்துறை மந்திரியாக்கப்பட்டுள்ளார்.

உமாசங்கர் தீட்சித்தின் இலாகா மாறிவிட்டது. அவர் ராஜ்ய சபை உறுப்பினரே தவிர மக்கள் சபை உறுப்பினர் அல்ல. எனவே மக்கள் சபை உறுப்பினர் அல்லாத ஒருவர் மக்கள் சபையின் உரிமையை மீறியதாக அவர்மீது உரிமைப் பிரச்னை கொண்டுவர முடியுமா என்ற சிக்கல் ஏற்பட்டுள்ளது.

வாஜ்பாயி (ஜனசங்கம்) இதுபற்றிக் குறிப்பிட்டு, உமா சங்கர் தீட்சித் இச்சபையில் உறுப்பினராக இல்லா விட்டாலும் தொடர்ந்து மந்திரியாகயிருப்பதால் அவர் மீது உரிமைப் பிரச்னை எழ முடியும் என்றார்.

"இந்த விவகாரம் பேசப்படும்போது உமாசங்கர் தீட்சித் சபைக்கு வரவில்லை. இது மேலும் உரிமை மீறலாகும்" என்று வாஜ்பாயி விவாதித்தார்.

சபாநாயகர் இது பற்றிக் கூறுகையில் உமாசங்கர் தீட்சித் மீதான உரிமைப் பிரச்னையில் ஏற்பட்டுள்ள சிக்கல் முக்கியமானதாகும். இது ஆராயப்பட வேண்டியதாகும் என்றார்.

### சர்ச்சை

இந்தப் பிரச்னை அல்லாமல் எதிர்க்கட்சி கொண்டு வந்துள்ள உரிமைப் பிரச்னை தனிப்பட்ட முறையில் உமா சங்கர் தீட்சித் மீதானதா அல்லது உள்துறை அமைச்சர் மீதானதா என்ற சர்ச்சையும் சபையில் ஏற்பட்டது.

உள்துறை மந்திரி பதவியிலிருந்து உமாசங்கர் தீட்சித் மாறிவிட்டாலும் உரிமைப் பிரச்னை தனிப்பட்ட முறையில் அவர் மீதானதுதான்' என்று எதிர்க்கட்சியினர் வாதித்தனர்.

இக்கட்டத்தில் பிரதமர் இந்திரா குறுக்கிட்டார். உள்

(3-ம் பத்தி பார்க்க)





# ஓடும் பஸ்ஸில் குழந்தை பிறந்தது

நாகை, நவ. 28—நாகையை அடுத்த வேளாங்கன்னியிலிருந்து சுந்தரராமன் டிரான்ஸ்போர்ட் பஸ் ஒன்று நாகையை நோக்கி வந்து கொண்டிருந்தது. அப்போது பாப்பா கோவில் அருகே வந்து கொண்டிருக்கும்போது பஸ்ஸிலிருந்த கர்ப்பிணிப்பெண்ணுக்கு ஓடும் பஸ்ஸிலேயே குழந்[illegible] பிறந்தது.

உடனே பஸ்ஸை ஓட்டி வந்த உரிமையாளர் அப்பாதுரை நாகை அரசாங்க பெரிய மருத்துவ மனைக்கு ஓட்டிப்போனார். தாயையும், குழந்தையையும் ஆஸ்பத்திரியில் சேர்த்தனர்.